கடவுள் துணை.

சித்திரபுத்திர

# நயினார்கதை



மங்கலம்

வடிவேலுமுதலியாரவர்களால்

பரிசோதித்து

---

மதுரை-புதுமண்டபம் புத்தகஷாப்.

பி. நா. சி. கடைகாரியம்,

மு. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால்

---

பிடாரித்தாங்கல்.

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை,

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

---

1909

சென்னை பிரம்பூர் [illegible] 60-நெம்பர் வீடு.

உ

கடவுள் துணை.

# சித்திரபுத்திர நயினார்கதை.



காப்பு.

அத்தனும்அயனுமாலுமானநல்ரிஷிகள்தேவர்
சித்தரும்பலாபலன்கள்நெறியுடன்தெளிவதற்குச்
சித்திரபுத்திரனார்செனித்ததோர்கதையைப்பாட
மத்தகமுந்தொந்திவயிறுநங்காப்பதாமே.

வெண்பா.

சீர்கொண்டபூதலத்திற்சித்திரபுத்திரன்கதையைப்
பார்கொண்டசெந்தமிழ்ப்பாடவே-யோர்கொண்ட
வார்பூத்தகோலமுலைமாதுமையாளீன்றெடுத்த
கார்பூத்தகுஞ்சரமே காப்பு.

விருத்தம்.

ஆனைமுகமுமொருகொம்பும்அகன்றமார்புஞ்சிறுகண்ணும்
பானைபோலப்பெருவயிறும்பாங்கார்பூணநூலழகும்
தானேதோன்றினனுளத்திற்றயவாய்வாழும்விநாயகனே
நானேயுனதுபதந்தொழுதேனுவினுதிப்பாய்கணபதியே.

நூல்.

திருமகிழ்ந்துவாழுமந்தச் சித்திரபுத்திரர்கதையை
விருப்பமுடன்பாட விநாயகனேமுன்னடவாய்
விக்கினவிநாயகனே வேழமுகத்தைங்கரனே
தொந்திக்கணபதியே தூயவனேமுன்னுதவாய்
கர்த்தனருள்பெற்ற கணபதியேகாத்தருள்வாய்
சத்திக்கணபதியே தையலுமைபுத்திரனே
எத்திசையும்போற்றும் இறையோன்திருமகனே
பத்தியுடன்தொழுவோர்க்குப் பாவங்கள்தீர்த்தவனே
சித்திரபுத்திரர்கதையைச் செப்பவருள்செய்வாயே
சீராகவாழுஞ் சித்திரபுத்திரர்கதைக்கு
நேராகவந்துதவு நீலமயில்வாகனனே
அந்தரியேதாயே அயனாரிடத்திருக்கும்
சுந்தரியேவெள்ளைநிறச் சோதியாய்முன்னுதவாய்
பத்தியுடனெப்பொழுதும் பாங்காகவந்துதவாய்
புத்திமிகவுண்டாகப் பொற்கொடியேவந்துதவாய்
பத்தியுடன்பாடும் பாடுசேணிக்கதையை
ஆதிபரனும் அச்சுதனும்வேதாவும்
தில்லாமுப்பத்து முக்கோடிதேவர்களும்
எல்லோருமாக விருக்கும்போர்காலையிலே
சித்தமகிழ்ந்து செப்புவார்சுரரும்

நன்றுதீதுதெரிய நடுவெழுதுவார்கணக்கர்
ஈசனருள்பெற்ற எமதருமர்தன்னிடத்தில்
நேசமுடன்கணக்கு நிச்சயமாய்த்தானெழுத
புண்ணியஞ்செய்தவரைப் பூதலத்தில்வாழ்பவரை
எண்ணரியபாவ மியற்றியோர்தங்களையும்
ஒன்றுந்தவறாம லுள்ளபடிதானெழுத
வென்றிபுனைநற்கணக்காய் விரைந்தேயெழுதிவர
அத்தரிநாட்டுக்கான் அதிகாரியாங்கணக்கா
முத்திபூரநாட்டுக் கெல்குமுதற்கணக்கர்
நாட்டுககணக்கும் நாளுர்பெருங்கணக்கும்
எட்டுப்புரத்தில் எழுதுமெழிற்கணக்கர்
நல்லார்குணத்தை நடுவெழுதுநாயகர்
பொல்லார்குணத்தைப் பிரித்தெழுதும்புண்ணியனார்
தன்னைநினைத்தவர்க்குந் தன்னியமஞ்செய்தவர்க்கும்
இன்னிலத்திற்செல்வம் இசைவாகத்தன்னருள்வார்
நல்லதிருக்கதையை நானிலத்திற்பாடுகிறேன்
எல்லோரும்நீங்க ளியல்பாகத்தான்கேளும்
உத்தமனார்தன்கதையை யன்பாகத்தானகேளும்
அத்தனதிருக்கதையை யன்பாகத்தான்கேளும்
மன்னவனார்தன்கதையை மகிழ்ந்திருந்துகேட்டவர்கள்
தென்னவனார்தன்கதையைத் தினமும்வந்துகொண்டாடி
பரமனார்தனக்கதையைப் பக்தியுடன்கேட்டவர்கள்
பார்வேந்தன்தன்கதையைப் பண்புடனேகேட்டவர்கள்
சித்திரபுத்திரக்கதையைச் சிந்தையுடன்கேட்டவர்கள்
உ திரங்களசொல்லாம லுண்மையாய்க்கேட்டவர்கள்
புத்திரனற்பாக்கியங்கள் பொருந்தியேதான்வாழ
வேணுமென்றயீசுரனார் விஸ்தாரஞ்செய்தகதை
இனிமேல்நடத்துகிறோம் இப்போதுசெய்யும்வகை
சித்திரைக்குச்சித்திரையிற் சீரார்பவுரணையில்
விரதமதுதானிருந்து வெண்பட்டுத்தானுடுத்தி
புண்ணியமான பூதானந்தான்கொடுத்து
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்கொடுத்து
பூதானம்கோதானம் வஸ்திரதானங்கொடுத்து
பந்தல்விதானம் பாங்காகத்தான்போட்டு
தோரணங்கள்கட்டித் துலக்குமேற்கட்டிகட்டி
வித்தைவிநாயகரை விரைந்துமேதான்போற்றி
செய்யும்வகையதற்கு சிறக்கவேவைத்தபின்பு
பூரணகும்பம் பொன்னின்குடத்தில்வைத்து
வஸ்திராபரணங்கள் வகையுடனேதான்சாத்தி
தெட்சணைகள்வைத்து திருமாலைகள்சாத்தி
சந்தனக்குங்குமஞ் செவ்வையுடனேசாத்தி

வாழைக்கமுகுடனே வான்கரும்பு தானிருத்தி
பொன்னினிளக்குவைத்துப் பூமலர்கள் தான்சாத்தி
வாழையிலைப்பரப்பி வைக்கும்வகைகனிகள்
வாழைப்பழமும் வருக்கைப்பலாச்சுளையும்
மாங்கனியுந்தேங்கனியு மற்றுமுள்ள நற்கனியும்
தேமாங்கனியுடனே செழுங்கதலிநற்பழமும்
விளாங்கனியுஞ்சர்க்கரையும் விரவிமிகப்படைத்து
கடலைசிறுபயறுங் காராமணிப்பயறும
கடலைபொரியவலும் வேண்டுமெபணியாரம்
தேனுந்தினையும் திறமாகத்தான்படைத்து
கரும்பொடிளநீருங் கற்கண்டுநற்கனியும்
பொருவிலங்காயுடனே பிட்டமுதலெள்ளுருண்டை
கொழுக்கட்டைதேங்காய் கொண்டுவந்துதான்படைத்து
தோசைவடையிட்டிலியுந் தோன்றமிகப்படைத்து
அப்பமதிரசமும் ஆனதொருதேன்குழலும்
பாயசமும்பாணகமும் பதிவாகத்தானும்வைத்து
அன்னமிகசமைத்து அரன்பாலன்முன்னேவைத்து
புதனுக்குநெய்யும் பொரிக்கறியுள்ளதெல்லாம்
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்படைத்து
ஆத்தனுர்தம்மருளால் அமுதுசெய்யபண்ணுவித்து
நெய்வேதனஞ்செய்து நியமமுடன்பூசித்து
தோத்திரங்களசெய்து தொழுதுமிகப்பணிந்து

விருத்தம்

கங்கையைத்தரித்தோன்பாலா கரிமுகாவுன்றன்பாதஞ்
சங்கையாய்த்தரணியோர்கள் தாமுடன்போற்றிசெய்ய
மங்களமாகவாழ்ந்து வந்தெனக்கருளுகாதா
யெங்குமாநிறைந்தாய்நீயு மிறையவாபோற்றிபோற்றி.

வசனம்.

இப்படிக் கணபதியைத் தோத்திரஞ்செய்து அருச்சனை நெய்வேதனமுதலானதுஞ் செய்து தூபதீபங்கொடுத்து அப்பால்மேற்கதையைநடத்தவேண்டியது.

நடை.

சங்கரனுர்மெய்க்கத் தானெழுதமெய்க்கணக்கர்
சித்திரபுத்திரரைச் சேருடனே தானிருத்தி
பீதாம்பரஞ்சாற்றிப் பெருப்பவட்டஞ்சாத்தி
சீதளங்களான செண்பகமுந்தான்சாத்தி
சுத்தாதியுள்ளதெல்லாந் தோன்றமிகச்சாத்தி
அதியால்முறைப்படியே அர்ச்சனைகள்செய்தபின்பு
வெள்ளிலையோடும் விளங்கும்அடைக்காயும்
டன்னாவமிழ்நெய்வேத்தியம் உவந்துமிகப்படைத்து
புத்தகத்தினெழுதுலங்கும் பொன்னின்எழுத்தாணியுடன்

# சித்திரபுத்திரநயினார்கதை.

பூதலத்திலுள்ள புதுப்பண்டமுள்ளதெல்லாம்
இஷ்டமுடனேபடைத்து எல்லோருமிக்கதையைத்
தெண்டனிட்டே இக்கதையைச் செப்பவேணுமென்று
பத்தியுடன்கேட்கப் பகர்தலுற்றவிக்கதையை
துங்கபுகழ்மாதர்மைந்தர் உண்மையுடன்கேழ்க்கச்
சொல்லுமையாவென்று அன்பமறக்கேழ்க்கலுற்றார்
கல்லுமுருகிக் கருத்துடனேகேழ்க்கலுற்றார்
மன்னனும்புகழுங்கள் மங்கிலியந்தான்வாழ்க
மலடிகளெல்லா மனமுருகித்தான்கேட்க
அகம்பாவம்விட்டு அன்புடனேகேட்டவர்கள்
புண்ணியங்கள்செய்து புதுமையுடன்கேட்டவர்கள்
நல்லநினைவுவைத்து நன்றாகக்கேட்டவர்கள்
கதைமுழுதுங்கேட்டவர்கள் கயிலைப்பதம்பெறுவார்
வந்தவலைக்குறைவு நீங்குமென்றீசுரனார்
பிச்சையிடாத பெரும்பாவியானவரும
நச்சுவாய்ப்புல்லியர்கள் நடுக்கேடுசெய்தவர்கள்
கள்ளிகளாயுள்ளார் கணவனுரைதப்பினவர்கள்
பிச்சையிட்டுண்ணாத பெரும்பாவியானவர்கள்
குண்டுகளின்சொலலுங் கொடும்பாவியானவர்கள்
உற்றுநின்றுகேட்டு உறவைமுரித்தவர்கள்
பலநினைவுவைத்த பாவிகளானவர்கள்
கொற்றவரைத்தள்ளிவைத்த கொடும்பாவியானவர்கள்
மற்றவரைத்தேடி வாழ்ந்திருக்கும்மகாபாவி
பிள்ளையழிக்கும் பெரும்பாவியானவர்கள்
சண்டையிட்டுநித்தந் தன்பேச்சுமேலிடவே
கொண்டவனைப்பேணாத கொடும்பாவியானவர்கள்
தன்வீட்டைச்சாத்தி அசல்வீட்டிற்போயிருந்து
பின்னங்கள்பேசும் பெரும்பாவியானவர்கள்
பசித்தாரிருக்கப் பார்த்திருந்தபாவியர்கள்
இத்தியாதிபேர்களெல்லாம இக்கதையைக்கேளாமல்
கடக்கவேநில்லென்று கணக்காயுரைத்தமொழி
பூமிதனில்விளங்கு புதுமண்டபம்வருதென்றான்
பெரியவர்முதலானவர்க்குப் பிசகாமல்தானிந்த
வேதியர்க்கீய்ந்தியந்த விரதமதைக்கொண்டாடி
கேட்டவர்களெல்லாம் நிச்சயந்தம்வாழ்ந்திருப்பார்
காரணமாய்நடந்த கதையைநடத்துமென்றும்
பதிவிரதைப்பாரிருந்து பாங்குடனேகேளுமென்றார்
பத்தியுடனேகேட்டசற் பா[illegible]க்கதையை
உத்தமனார்கதையை [illegible]
[illegible]
[illegible]
[illegible]

பாவங்கள்செய்வாரைப் பகுத்துகணக்கெழுத
வேணுமென்றுசொல்லி விமலனார்செய்தகதை
கயிலாசமீதிற் காரணமானகதை
இப்படியேதானுமங்கே நடக்குந்தறுவாயில்
தெய்வலோகப்பட்டணத்திற் றிறமாய்நடந்தகதை
நன்றாகச்சொல்லுகிறேன் நாடெல்லாந்தானறிய
இந்திரனிந்திராணியுட னிருந்துமிகவாழ்கையிலே
புத்திரவாசை பிடித்துமிகப்புலம்பி
நடந்தகதைசொல்லுகிறோம் நன்றாகக்கேளுமென்றார்
நல்லார்பசுவு மிறையோன்கொடுத்திருக்க
பிள்ளையில்லாவாழ்வு பெருமைபடையாதென்று
இந்திராணியம்மை யேங்கிமிகவாடி
சொன்னவசனத்தைச் சொல்லுகிறேன்கேளுமென்றார்
பட்டிபலுகாது பாவங்கள்தீராது
ஆளடிமைகன்று ஆகாசம்போய்விடுங்காண்
ஆபரணாதியெல்லாம் அழிந்திடுங்காண்மன்னவரே
சித்திக்கக்காரியங்கள் சிதறியேபோய்விடுங்காண்
தருமங்கள்செய்யவென்று தானினைத்தாரிந்திரரும்
கன்னிகாதானங் கருத்தாகச்செய்தார்காண்
மாதானங்கோதானம் மாஸ்திரதானங்களும்
விமரிசையாய்த்தருமங்கள் வேணபடிசெய்தபின்பு
தபசுசெய்யவேணுமென்று தானினைந்தாருத்தமனார்
உத்தமருமுத்தமியும் உலகாண்டோன்றனைநினைந்து
தபசுகள்செய்தகதை சாற்றுகிறோமினிகேளும்
இந்தக்கதையை யெள்ளளவுந்தப்பாமல்
கேட்டவர்களெல்லாங் கிளைசுற்றம்வாழ்ந்திருப்பார்

விருத்தம்.

சித்திரபுத்திரர்கதையைச் சிறப்புடன்கேட்டோன்பு
பதியாயிருந்தோரெல்லாம் பழவினைநீங்கிநல்ல
அத்தர்தன்பதியைச்சேர்ந்து அத்துடன்சேர்ந்துவாழ்வார்
பத்தியாய்முந்நூல்சொல்லும் பகர்ந்தனர்நூல்வல்லோரே.

வ-ம். அதெப்படியென்று கேட்பீரானால் அனேகமான திரவியங்கள் பூமிகள்முதலான சகலபாக்கியங்க ளிருந்தாலும்மைந்தனில்லாதவாழ்வு வாழ்வல்லவென்று இந்திரனும் இந்திராணியும் வெகுமனஸ்தாபமாய்க்கிலேசப்பட்டுத் தங்கள்பொக்கிஷக் களஞ்சியத்திலுண்டான திரவியமுதலானதையெல்லாங்கொண்டு அநேக தருமங்களைச்செய்துபின்பு பார்வதிசமேதராகிய ஈஸ்வரரை நினைத்து தவஞ்செய்யச் சித்திரபுத்திரநயினார் வந்துபிறந்து அவதரிச்சித்ததாக நடந்த கதையானதால் இந்தக்கதையைமனம்வைத்து அன்பாகப்பத்தியுடனேகேட்டவர்களுக்கு வரும்பலத்தை இனிமேல்விபரமாகச் சொல்

# சித்திரபுத்திரநயினார்கதை.

நடை.

உத்தமருமாவார் உயர்ந்தகுடியாவார்
பத்தினிகளாவார் பலபிள்ளைதாயாவார்
சந்திசிலம்பொருந்தித் தாட்டிகராய்வாழ்ந்திருப்பார்
நீடூழிகாலம் நேசமதாய்வாழ்ந்திருப்பார்
மங்கிலியம்வாழ்ந்து மகிழ்ச்சிமிகவுண்டாகும்
செல்வமிகவுண்டாகிச் சீராகத்தானிருப்பார்
ஆழ்கடல்வற்றிடினும் அவர்புகழ்தான்குன்றாது
மாற்றில்லாச்செம்பொன் மதிக்குமவர்வசத்தில்
புண்ணியவானானாலும் போதமுள்ளரானாலும்
மண்ணுமதியுள்ளளவும் வாழ்வுமிகவுண்டாகும்
சித்திரைக்குச்சித்திரையிற் சீரார்பவுரணையில்
சித்திரைமாதந் திருநோன்புவந்ததிலே
உத்தமரைநோக்கி யொருநோன்புசெய்தவர்கள்
மைந்தர்களானாலும் மடந்தையர்களானாலும்
எந்தக்குலத்தில் எவர்களேயானாலும்
தந்தைதனைக்கொன்ற பெரும்பாவியானாலும்
நித்தமிதுவுண்ணும் நீச்சரேயானாலும்
யிந்தக்கதையை யியல்பாய்க்கருத்தில்வைத்து
லோகத்தியற்கையென்று யோசியாமலேயிருந்து
இளகும்படிமனதி லெந்நேரமும்நினைத்தால்
அங்கேதானேன்புக் கவரேவெளிப்படுவார்
இந்திரனைப்போலே இனிதாகவாழ்வுமுண்டாம்
அந்தநெடுமால்பதத்தில் அழகுடனேவாழ்ந்திருப்பார்
சிவனருளுமுண்டாகும் தீங்கொருநாள்வாராது
நம்முடையசெல்வங்கள் நாள்தோறுமுண்டாகும்
முன்னேன்பிராத முக்கடனேயானாலும்
இன்னேன்பிறந்தவர்க ளிகபரமுந்தான்பெருவார்
முத்தியருள்கொடுக்கும் மோசங்கள்நீங்கும்
வல்வினைகளானதெல்லாம் வழிவிலக்கித்தான்போகும்
நல்லதொருபுண்ணியங்கள் நாள்தோறுமுண்டாகும்
ஆராகிலுமிதனை யன்புடனேகேளுங்கள்
நயினார்பிறப்பையினி நன்றாகச்சொல்லுகிறேன்
கயிலாசத்தில்நடந்த காரணத்தைச்சொல்லுகிறேன்
சிவனார்கயிலையினிற் சிறப்பாயிருக்கையிலே
அரனார்மனமகிழ்ந்து ஆனபராசக்தியுடன்
கேளாயுமையவளே கிருபையுடன்சொல்லுகிறேன்
ஊழின்விதிப்படியே யுள்ளபடியேயுலகில்
அவரவர்செய்தபுண்ய பாவங்கள்தானறியார்
நாமேபதியவென்றால் ஞாயமில்லைகண்டாயே
நம்மையினையாமல் நாள்தோறும்வைத்தவர்கள்

[illegible]நல்லாத செம்மக்களாவர்கள்
[illegible] மோசம்பெறுவதற்கு
[illegible] மேதினியிற்றுணவர்கள்
அசுரர் அரக்கர் அநேகமுதலானோர்
சத்தியமறந்து தானிடுக்கஞ்செய்வதனால
அப்படியேவாராமல் அதற்கானசெய்தியொன்று
ஒப்பில்லாப்பெண்ணே யுமையவளே நீகேட்பாய்
செப்பமுடன்கணக்குச் சிராகுத்தானெழுதி
இட்டமுடன்செய்து இட்சைகள்தான்செய்வதற்கு
நாமேகணக்கெழுத நல்லதல்லகண்டாயே
மூத்தப்பிள்ளைகணபதியை மொழிவதுநல்லதல்ல
மூலமாயிவ்விடத்தில் மூத்தமகன் தன்னைவைத்தோம்
கோலமயில்வாகனனுங் கொடுஞ்சூரன் கண்டாயே
சூரரைக்கொல்லவே சேனைதனக்குவைத்தோங்காண்
சாலக்கணக்கெழுதான் தகப்பன்குருசாமி
கோலப்பிரமாவைக் கொண்டுசிறையும்வைத்தான்
அவனைத்துதித்தவர்க்கு அநேகவரங்கொடுப்பான்
புவனங்கணக்கெழுதப் புகர்சொல்வானுன்மகனும்
பாலனிருந்தும் பழிப்பார்க்கிடமாகும்
மக்களிருந்து மனுநீதிதானெழுத
இந்தவகைக்கணக்கு மெழுதிவரும்படிக்கு
நல்வினைகள் தீவினைகள் நன்றாயெழுதிவர
எந்தவினையானுலு மியல்பாகவுள்ளபடி
கணக்குப்படியே கருமங்கள்தான்பொசிக்க
பிறர்சாட்சியால்கணக்குப் பிரபஞ்சந்தானிருக்கும்.
என்றரனார்சொல்ல வியல்பானபார்வதியும்
நல்லதுதான்சொல்லவந்தீர் நாயகரேயும்முடைய
திருவுளத்துக்கேற்றபடி செய்யுமென்றாள்பார்வதியும்
இருந்துமிகப்போசி யீசுரருமேதுசொல்வார்
பூமாலைதனோக்கிப் பொற்பலகைகொண்டுவர
என்றபொழுதே யியல்பானபொற்பலகை
நன்றெனவேபார்வதியு நாதன்முன்புவைத்தனளே
பார்வதிகொண்டுவரப் பரமனாரேதுசொல்வார்
சித்தமகிழ்ந்து சித்திரக்கோல்தந்திடென
அந்தப்படியே பய்மையுமைகொண்டுவர
சாதிலிங்கக்காரன் தவளநிறபச்சையுடன்
நீலமணிவெள்ளையுட னெழிலாகச்சேர்த்துடனே
பால்நிறமுமாகப் பாவித்தார்பலகையின்மேல்
சாலவேதம்மைப்போ லாகவென்றுதயாநிதியும்
கோலமுடனிருக்கக் குறித்தாரேசித்திரத்தில்
பஞ்சவர்ணமாகப் பாகமுறத்தப்பாமல்

அரனார்திருக்கரத்தா லாபரணந்தான்பூட்டி
காதிலேகுண்டலங்கள் கதிரொளிபோற்றான்சாத்தி
கப்புரிநூலு முழுவயிரப்பதக்கமுடன்
தும்பிப்பதக்கமுடன் சூடாமணிக்கவசம்
பில்லைச்சரப்பளியும் வேணபணியாபரணம்
பாதமுடிவரைக்கும் பலபணிகள்தான்பூண்டு
பார்வதியுமீஸ்வரரும பார்த்தார்கள்கண்குளிர
அவனுடையதிருவுளத்தா லாண்டவனாருகந்து
திருநீற்றுக்காப்புமிட்டுச் சித்திரபுத்திரரெனவே
உபதேசங்காதி லுரைத்தாரேயுத்தமற்கு
அதிகாரஞ்செய்கணக்கு மைபனே தந்தோமென்றார்
முத்திரைமோதிரத்தைச் சித்திரமாய்க்கையிலிட்டு
நீடூழிகாலம் கணக்கெழுதும்நீரெனவே
உத்தமருமங்கே யுடன்வணங்கித்தெண்டனிட்டார்
அம்மையுமைபார்வதியை யப்போதேதெண்டனிட்டார்
தெண்டனிட்டுநின்றதொரு சித்திரபுத்திரரை
வாரியெடுத்து மகனேயெனமொழிந்து
ஆருமறியாதா ரரும்பொருளார்தன்மகனே
சீருடனேநீருஞ் சிவனாருட்படிக்குப்
பாரும்விடும்புமிந்தப் பரன்மொழிகள்தப்பாமல்
பல்லாயிரங்கோடி பலன்கணக்குத்தானெழுத
சொல்லார்கணக்கு சருவேழுதனுண்டாக்கி
கருமவிழல்தந்து கணக்கில்தினசரியும்
எழுதித்தொகைபடுத்தி யியற்றும்பயன்படியே
பழுதுகன்வாராமல் பார்த்தவுடனவ்வேடு
எடுத்தவர்கள்வாசிக்க யிந்தவரம்தந்தோம்நாம்
தடுத்தவர்கள்பேசாமல் தன்னிழலேசாட்சிசொல்லும்
இச்சாட்சிவந்து பியல்பாய்கணக்கெழுதும்
உனக்குப்பிரயாசை யொன்றுமில்லையென்றுசொல்லி
கணக்கனுயர்நீயிருந்து கருவேலங்கைக்கொள்ளும்
என்றுகருவேலம் ஏற்பித்தாரன்னேரம்
பண்டுமுன்னுருள்ள பழையகணக்குள்ளதெல்லாம்
ஆயிரம்பார மசைக்கவொண்ணாபட்டோலை
தப்பாமலேயெழுதத் தார்வேகதர்தான்கொடுக்க
சித்திரபுத்திரனார் சிமானார்தன்னிடத்தில்
வாங்கிருந்தமனார் வையகம்வாழவென்று
அன்றுடன்கணக்கு யெழுதவிருந்தமனார்
இருந்துகணக்கு யெழுதவிருந்தமனார்
சிவனார்தம்வாசலில் சிறப்பாயெழுதினார்

விருத்தம்

அய்யனுமுமையுங்கூடி பாலகர்க்கணைக்கராக
மெய்பராய்ச்சிருஷ்டித்தார்கள் மேதினியுள்ளமட்டும்

செப்பஅக்கணக்கைப்பார்த்துச் செய்திகள்தவறுவண்ணம்
தையலாள்பாகன்வாசல் தருக்கணக்கெழுதனுற்றார்.

வசனம்.

எப்படியென்றால் கைலாயத்திலே சுவாமியும் பரமேஸ்வரியும் முப்பத்து முக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் மற்றுமுள்ள தபோதனர்கள் நிறைந்திருக்கும்போது அண்டபுவனங்களெல்லாம் பாவபுண்ணியபலன் தெரியவேண்டியதற்குநம்முடையகுமாரர்களிருபேருங் காரணமான கதைகள் சிலநடக்கவேண்டியதற்குஅவர்க ளாகவேண்டியதால் மற்றுமுள்ளயோர்கள் இதற்குஆகத்தக்கினவர்களாருமில்லையென்றுசுவாமி பரமேஸ்வரர் தானேயோசித்துஉமையவளையழைத்துத் தங்கப்பலகையெடுத்துவரச்சொல்லி உருவுக்க அதை உமையவள்கண் டதிசயப்பட்டுகருவுருவாய்ப்பேசும்படி கிருபைபாலிக்கவேணுமென்று அறிவிக்க அப்படியேகிருபைசெய்துவிஞ்சைமந்திரமுபதேசித்து சித்திரபுத்திரனென்று பேருமவைத்து ஆடையாபரணமுதலானதும்பூட்டி மகனைக்கட்டிமுகர்ந்துஅண்டபுவனங்களி லுண்டான முன்னாள்கணக்கும் கருவேலமும்விஷ்ணுமூர்த்தி பிரமாமுதலானவர்களிடமுள்ளகருவேலமும்பொக்கிஷமுதலானதும் பாவபுண்ணிய பலகணக்குங்கொடுக்க உமையவளாகியபரமேஸ்வரியும் வேண்டத்தக்கினவரங்களுங்கொடுத்து தினச்செய்திநடக்கிறபாவபுண்ணியமுதலானபலகணக்கும்நமக்குஅறிவியுமென்றுசுவாமி உத்திரவுகொடுத்தபடியே சித்திரபுத்திரருங் கைலங்கிரிவாசரான பரமேஸ்வரர் சந்நிதானத்திலிருந்து கணக்கெழுதிவந்தார்இப்படிகைலாயத்தில் நடந்துவரும்போதுதேவேந்திரன்மகாவாசைகொண்டுவேணத்தக்கின தருமங்களுஞ்செய்து ஈஸ்வரனைநோக்கி இந்திராணியுடன் தவசுபண்ணுகிற விஸ்தாரத்தை இனிமேற் சொல்லுகிறோமன்புவைத்து ஏகமனதாகக் கேட்பீர்களாக.

நடை.

எண்ணத்தொலையாத ஏற்றசிவபூசைதன்னை
செய்யவேணுமென்று திறமாகவேநினைந்து
தேவாதிகளெல்லாஞ் சேரவேசூழ்ந்துவர
செம்பொன்மணித்தேரிற் சிறப்புடனேதானேறி
பசும்பொன்னுலகான பதியைவிட்டுத்தேர்நடத்தி
விண்ணுலககன்னியர்கள் வேணபடிசூழ்ந்துவர
இப்படியேயிந்திரனு மேத்ததவஞ்செய்ய
வருகிறவழிதனிலே வந்தாளகலிகைதான்
புண்ணியதீர்த்தமாடப் புறப்பட்டாள்கலிகையும்
தந்திரமாயப்போது தானகண்டாரிந்திரனார்
மெத்தமயலாகி மெய்சோர்ந்தறிவழிந்து
தேர்மேலேதான்விழுந்தான் தேவர்கள்சென்றெடுத்தார்
பார்மேலேநடந்து பகற்கண்டஆசையினால்
காதல்கொண்டயிந்திரனார் காமினியைநினைந்து
[illegible]வுபேசி அகலிகையைச்சேரவெண்ணி

தேனாமிகவிருந்தி தேவர்களைத் தானிருத்தி
மாய்மாய்சென்று மருத்துமாமலையிலுள்ள
காய்கனிகள்கொண்டுடனே காரிருளாம்நேரம்
மாயர்யாகத்தால் மனைமைதனையிழந்து
ஆசைத்துயரமதால் அகலிகைவீட்டினிலே
சென்றாரேயிந்திரனார் தெய்வவுருமாறி
அன்றிரவுநல்லுறக்க மதிக்குநடுச்சாமத்தில்
வேளையிதுவெனவே விடியற்காலங்கூவும்
கோழியாய்நின்று கூவினானிந்திரனும்
அப்போதுகௌதம ரானரிஷிதானும்
எப்போதும்போல விடிந்ததேயென்றெழுந்து
தெண்டுகமண்டலமும் திருநீற்றுப்பையுடனே
கங்கைக்கரையில்வந்து நின்றார்மகாரிஷியும்
கங்கையுறக்கமதைக் கண்டார்மகாரிஷியும்
மாயர்விதியோ மாயமோதெரியாது
நந்தவனஞ்சென்று நாமறிவோமென்றுவர
அந்தமலரும் அரும்பாயிருந்ததுபார்
இதுவென்னசோதனையோ யீஸ்வரரேதஞ்சமென்று
அர்த்தசாமநேர மறியாமல்வந்தோமென்று
மனக்கவலையாகவிருடி மனையிடத்தேமீண்டுவந்தார்
சென்றறிவோமென்று திரும்பிவருமந்நேரம்
இந்திரனுமவ்விருளில் விருடிரூபந்தானெடுத்து
வந்துஅகலிகையின் வர்ணமுகம்நோக்கி
மனக்கவலைமையலொடு வந்தவறலாரெல்லாம்
கேளுமென்றுசொல்லிக் கனிதமாய்சொன்னவுடன்
பாவிகெடுவாய் பத்தினிமார்தன்னிடத்தில்
தீவினையால்வந்தாயே சீசீயுன்மனைமையுடன்
நீதியழிந்திடுவாய் நிச்சயமேதப்பாதென்று
ஆசையில்லாமல் அகலிகைசொல்லிநிற்க
வாசவனுமந்நேரம் மயக்கத்தால்வீழ்ந்திறைஞ்சி
ஆசைத்துயர்காப்பாய் அகலிகையேயென்றுசொல்லும்
அப்போதுமகாரிஷியு மதிவேகமாகவந்தார்
மெய்யாகப்போனவரும் மீண்டுவந்தாரந்நேரம்
கண்டுமிதுவென்ன காரணமோவென்றுசொல்லி
அண்டர்பதியோனை ஆரடாவென்றுகேட்க
பூனையுருவங்கொண்டு போனானேயிந்திரனும்
ஆடாபின்னோ மறிவுகெட்டுவந்ததென்ன
பெரும்பிறப்பும் பிழையாமற்சொல்லெனவே
இந்திரனாரும் ரிஷியேயுனதிடத்தில்
வந்ததுவேறில்லை வருஷபலனுள்ளதெல்லாம்
சாஸ்திரங்கேட்கத் தான்வந்தேனென்றுரைத்தான்
இந்நேரமீது மிகும்புசெய்பவர்தனக்கு

அகலிகையையிச்சித்தே யடைந்தாய்நீயென்றுசொல்லி
ரிஷிக்குதான் கண்சிவந்து நெருப்புப்பொறிபறக்க
இன்றெறித்தோமாகி யிந்திரலோகமழியும்
இச்சாபமிந்திரனை யின்றுதெரியாமல்
துற்சாபம்வேறு சொல்லுவாரப்போது
தன்தாரம்விட்டு பிறர்தாரம்வேண்டினதால்
இந்திரன்சரீரமெல்லாம் யோனியாய்ப்போகவெண்ணி
ஆயிரம்யோனி அங்கமெல்லாம்வெடிக்க
என்றுமகாரிஷியும் ஏற்றதொருசாபமிடத்
தப்பாமலந்நேரம் வெடித்ததேதான்குறியும்
கண்டானேயிந்திரனுங் கண்கலக்கமுண்டாகித்
தொழுதானேரிஷியைத் தோற்றமுடனந்நேரம்
பெரியோரேநீர்பொறுப்பீர் பிழைசெய்தேனுஞ்சிறியேன்
அரியவினைகளானேன் ஆசையாகத்தான்விரும்பி
வஞ்சகனுமானேன் மாயாவிநானுனேன்
வஞ்சகமாய்செய்தகுற்றம் மகாரிஷியேநீர்பொருப்பீர்
என்றுசொல்லியிந்திரனும் ரிஷியையடிபணிந்து
இந்திரலோக மிழந்துநான்போகாமல்
இச்சபந்தீர்த்து இரட்சிக்கவேணுமென்று
அச்சபத்தோடே யருகேதானிற்பளவில்
இந்திரனைப்பார்த்து விருடியுமேயேதுரைப்பார்
இருடிகள்சாப மிந்திரனேதீராது
ஆனவமாயையினு லழியவந்தவிந்திரனே
அரனுமாலயனுரை தரணியிலேபூசைசெய்தால்
ஆயிரம்யோனியு மாயிரங்கண்ணுகுமென்றார்
பூசைசெய்தேயிந்திரனும் போனுன்காணந்நேரம்
அப்போதுமகாரிஷியும் அகலிகையைப்பார்த்துடனே
கருங்கல்லாப்போகவென்று கடுஞ்சாபமிட்டனரே
அப்போதேயகலிகை யடிதொழுதுதெண்டனிட்டு
வேர்த்துவிரித்து மெய்கலங்கியுளநடுங்கி
இச்சாபந்தானும் பெனக்கோவரவேணும்
எதென்னமாயமோ வெம்பெருமான்சோதனையோ
சாபநிவர்த்தி தானருளவேண்டுமென்று
அகலிகைதான்பணிந்து அடிதொழுதுதெண்டனிட்டு
கேட்குமளவில் கிருபையுடன்மகாரிஷியும்
அரக்கர்குலமறுக்க அம்பரமாயவனுர்
ரகுகுலத்தில்வந்துதச ரதன்பாலனுய்ப்பிறப்பார்
[illegible]பேராகவந்து பிறந்துவளர்நாளையிலே
விசுவாமித்திரர்செய்யும் வேள்விகெடும்படிக்குத்
தாடகைசெய்தால் தானினைப்பான்மாமுனியும்
[illegible] தனிவேள்விமுடிப்பதற்கு
[illegible] விசுவாமித்திரர்

இராமலட்சுமண ரிருவரையுந்தானழைத்து
சங்காரஞ்செய்து தான்வேள்விமுடித்தபின்பு
மிதிலையைநோக்கி விரைந்துவருகையிலே
கலியாணம்பண்ணவென்று கனமாய்வருகையிலே
ஸ்ரீராமன்யாகஞ் சிறப்பாகபட்டவுடன்
பெண்ணாகவேருவாய் பேர்ந்துவிடுமுன்சாபம்
அப்போதுநாமுன்னை யழைத்துமேகொள்வோமென
கருங்கல்லுயாரையாய்ப் போனாளேகன்னிகைதான்

விருத்தம்.

இந்திரலோகம்விட்டே யெழிலுருபுவனஞ்சுற்றி
சந்திரவானமெல்லாம் தயவுடன்வரும்போதந்த
மந்திரரிஷிப்பெண்வந்து மலர்செய்யும்போதுகண்டு
இந்திரன்மயங்கிவாடி யேகினானிருப்பிடத்தில். (க)

இருப்பிடந்தேடிப்பார்த்து யிரவினிற்கோழியைப்போல்
உருக்கொண்டுகூவியந்த ரிஷியையுமுடனேபோக்கி
மருக்கிளர்கொடியாள்தன்பால் மயங்கியேசெல்லும்போது
செறுக்கிவர்ரிஷியுங்கண்டு சினத்துடன்சாபமிட்டார். (உ)

செய்ததோர்சாபங்காமத் திருடனாய்வந்ததாலே
வந்ததோர்பெண்மேல்மோகம் விருப்பமுமில்லையாகத்
துய்யதோர்மேனியெல்லாந் துற்குணயோனியாகும்
பொய்யல்லவென்றுசொல்லிப் போதுவெனவிடைகொடுத்தார். (ங)

இந்தநற்சாபத்தாலே யிந்திரன்தலைகவிழ்ந்து
அந்தநல்ரிஷியைத்தானு மடிபணிந்தவனேகேட்கத்
தந்தரவிசனரைத் தானுமேபூசைசெய்தால்
சுந்திரமேனியெல்லாந் துலங்குமாயிரங்கண்ணாமே. (ச)

வசனம்.

இதனுடைய விபரம் எப்படியென்றால் தேவேந்திரன்மகவானை யாய் தபசுசெய்யப் புறப்பட்டு வருகிறவழியிலே மருத்துமாமலைக் கௌதமரிஷிபததினி அகலிகைப்பெண்ரிஷிக்கு மலர்செய்யவந்தவி டத்திலிந்திரன் அப்பெண்ணுடைய அழகுசௌந்தரியங்களைக்கண் டுதவசைமறந்துபுத்திரனையும்விட்டுமையலகொண்டு அப்பெண்வாழு மிடத்துக்குப்போய் கோழியாய் நின்றுக்கூவ ரிஷிவெளியிற்புறப் பட்டுஸ்நானஞ்செய்யப்போகப் பண்ணுவித்து நான்சேரலாமென் றுயோசித்துச்செய்தான்அப்படியேரிஷியும்விடிந்துபோச்சுதென்று கங்கைக்கரையில்வந்து கங்கை நித்திரைசெய்கிறதைப்பார்த்தாந்த வனஞ்சென்று புஷ்பவிரிவுபார்ப்போமென்றுபார்க்கும்போது புஷ்ப ங்களெல்லாம் அரும்புமயமாயிருக்கிறதைக்கண்டு இதைகாரணமா யிருக்கிறதென்று தன்னுடைய இல்லிடமாகிய ஆசிரமத்திற்கு வரு

கையிடத்திற்றன்னுடைய விரகதாபத்தைச்சொன்னதில்அவள்மனம்கொர்ந்து சிலகொடுமையானவார்த்தைகளைச்சொல்லுகிறநேரத்தில் ரிஷிவருகிற சாடையைஇந்திரன்தெரிந்து பூனைவேஷம்போட்டதை ரிஷிஞானதிருஷ்டியினாற்பார்த்து ஆரடாநீ உன்னுடைய பேரும் ஊரும் வந்தவயணமுஞ் சொல்லென்றுகேட்க அடியேன் தேவேந்திரனென்று பெயரைச்சொல்லி இந்தவருஷத்துப்பஞ்சாங்கப்பலன் கேட்க வந்தேனென்று திருட்டுத்தனமாய்ச்சொன்னதைத்தெரிந்து இவன் அகலியைக் கபடுசெய்ய வந்தவனாய்க் காணுதென்று மகாகோபத்துடனே ரிஷியானவர் கண்களிரண்டும்நெருப்புப்பொரிபறக்கும்படி பார்த்துத் தன்தாரமிருக்க அசல்தாரத்துக்குஆசைப்பட்டதினாலே என்சரீரமெல்லாம் ஆயிரம்யோனிகளாகவெடிக்கக்கடவதென்றுசாபமிட்டார் உடனே இந்திரனும் பயந்து நடுநடுங்கி மகாரிஷியைத்தெண்டனிட்டு நமஸ்கரித்து எளியேனசெய்த குற்றம்பொருக்கவேணுமென்றுவேண்டி நமஸ்காரஞ்செய்ததின்பேரில் ரிஷிக்குக்கொஞ்சந்தயவுவந்து தானும்மாயனாகிய சுவாமி கயிலங்கிரிவாசரைப்பூசைசெய்தால் இந்தச்சாபம் அவராலேதீர்ந்துஆயிரம்யோனியும் ஆயிரங்கண்ணாகுமென்று விடைகொடுக்க அப்படியே தேவேந்திரன் தன்னுடைய பட்டணத்திற்குவந்துசுவாமிகயிலங்கிரிவாசனைப் பூசைசெய்துவரமுன்சொன்னபடியே ஆயிரங்கண்ணாகப்பெற்றுக்கொண்டான் அப்பால்நடக்கிறஅதிசயங்களை இனிமேல்வெகுவிஸ்தாரமாகச்சொல்லுகிறோமென்றவாறு அகலிகைப்பெண்ணுக்குநடக்கிறவிவரத்தைக்கேட்பீர்களாக.

விருத்தம்.

கவுதமரிஷியும்பெண்ணைக் கண்டகலிகையையுன்னைச்
சவுமயமாகக்கண்டு இந்திரன்சார்ந்ததாலே
புவிதனிற்கருங்கல்லாகிப் பொற்பெலாங்குறைவாயென்று
தவமுனிமுனிந்துநின்று சாற்றினார்சாபந்தானே. (௧)

எந்தனுக்கிட்டசாப மெந்தநாட்போமென்றேங்க
அந்தநற்சாபந்தீர வானதோர்வகையுஞ்சொல்வார்
சுந்தரத்தசரதற்குத் தோன்றியராமன்பாதம்
உந்தன்மேற்பட்டபோதே யொழிந்திடுஞ்சாபமென்று. (௨)

அஃதெப்படியென்றால் அகலிகையான பெண் மற்றொரு புருஷாள் வாடைபடாத பெண்ணாதலால்இந்திரன்கண்டுமோகித்ததினால் இந்ததேசம்விட்டு மறுதேச மாறவேண்டியதற்குக்கருங்கல்லாகப்போகக்கடவதென்றுசபித்ததினாலே அகலிகையானவள் ரிஷியானவரைத் தோத்திரஞ்செய்து எனக்கிட்டசாபம் எப்போதுநீங்கும் என்றுகேட்க மகாவிஷ்ணுவானவர்அரக்கர்குலமறுக்கவேண்டியதற்காக தசரதர்புத்திரனாகச்செனித்து ஸ்ரீராமனென்றநாமத்துடனிருக்குங்காலத்தில்விஸ்வாமித்திரானவர் வேள்விசெய்கிறதைநாடங்க [illegible]லழிக்கிற வேதனையைநீக்கவேண்டித்தசரதரிடத்திற்கேட்டு

ஸ்ரீராமனை அழைத்துக்கொண்டுபோய்த்தாடகையைச்சங்காரஞ்செய்து
மிதிலையிற்சீதைக்குக் கலியாணஞ்செய்யவரும்போது அச்ராம
னுடைய திருப்பாதம் உன்பேரில்பட்டவுடனே பெண்ணுருவாகி என்
னிடம்வருவாய் அப்போது உன்னைச் சேர்த்துக் கொள்ளுகிறேனெ
ன்று விடைகொடுத்தபடியேசிலநாட்சென்று ஸ்ரீராமர்வந்து தாடகை
யைக் கொன்று விசுவாமித்திரற்குச் சந்தோஷஞ்செய்வித்துமிதிலை
யிற் சீதையைக் கலியாணஞ்செய்யவரும்வழியில்ஸ்ரீராமனுடையபா
தம் அகலிகைப் பெண்பேரில்பட்டுத்தன்சொரூபமானதை ஸ்ரீராமர்
பார்த்து இதுவென்னவிதமென்று விசுவாமித்திரரைக்கேட்க அகலி
கையானவள் நடந்த விருத்தாந்தமெல்லாம் அவர்சொல்ல அப்பால்
ஸ்ரீராமமூர்த்தியிடத்திற்குபோகும்படியுத்தரவுகொடுக்கஅப்படியே
ரிஷியிடம் அகலிகைப்பெண் வந்துசேர்ந்து வாழ்ந்துக்கொண்டிருந்
தாள் அப்பால்தேவேந்திரன் நடக்கிறவிர்த்தாந்தமும் அதின்மேல்
நடக்கிறதையுஞ் சொல்லுகிறோம் கேட்பீர்களாக.

நடை-இந்திரன் தன்கதையை யியம்புகிறேன்கேளுமினி
ஆயிரம்யோனியுங்கண் ணாகுமென்றமாமுனியே
தெண்டனிட்டுக்கொண்டு திரும்பினார்பூசைசெய்ய
தானுவைமாலையனைத் தானேமனதிலெண்ணி
ஆணவமாயைதன்னைத் தாரணியிலுண்டாக்கித்
தான்செய்தகுற்றமெல்லாந் தானுமேதீருமென்று
வானத்துரிஷிசாபமதை மாலயனேதீருமென்று
மெத்தவேபூசை விரும்பியேசெய்யலுற்றார்
பூசைதனைச்செய்த புதுமைகளைக்கண்டுமிகத்
தானுவமாலயனுந் தயவுடனேவந்தித்து
ஆயிரம்யோனியுனக் காயிரங்கண்ணாகுமென்றார்
ஆயிரங்கண்ணாகுமென்ற அம்மூவரைப்பணிந்து
ஆயிரங்கண்ணுடைய அயிராவதத்தோனும்
வரமதிரம்பெற்று வாழுகிறநாளையிலே
அகலிகைசாபம் பிடித்துதேயங்கோரம்
தெய்வலோகபட்டணத்தில் வாழுகின்றதேவருக்கும்
எல்லார்க்குமாகப் பிடித்துதேசாபமது
தான்மடலாய்நின்று தவிக்கிறபுலியைப்போல்
வானுலகமெல்லா மடலாகப்போனதுவே
தான்மலமெல்லாமல் தரணியெல்லாம்தான்மடலாய்
பூமிவிளையாமல் பொன்மாரிபெய்யாமல்
காமனெரித்ததுபோல் காடுகளெல்லாமெரிய
தாய்க்குமரங்களெல்லாம் காயுதிர்ந்துபோனதுவே
பாலமரங்களெல்லாம் பால்வற்றிநின்றதுகாண்
பட்டிபசுவெல்லாம் பாழ்மலடுதானாக
காடியிருகமெல்லாங் கமலடாய்ப்போனதுவே
புல்லுக்கனுமிக பூக்களுமேயில்லாமல்
இந்திரலோகமெல்லாம் மீட்டுமிக்குபோனதுவே

இந்திரனார்தேவி இதுவெல்லாந்தான்தெரிந்து
இந்திராணியென்று இளங்கோதைதானிருந்த
அனர்த்தம்விளைத்தீரோ ஆனதொருஇந்திரரே
ரிஷியினதுசாபம் பலித்ததேயிப்போது
பத்தினிசாபம் பலித்ததுவுங்கண்டீரே
அவர்களுடசாபம் அவனியெல்லாஞ்சூழ்ந்ததுவே
மதிகொண்டுவாழ்க்கையிலே மதிமயங்கிப்போனீரே
தவசுமறந்து தட்டழித்தகாரணத்தால்
மனதிற்றுயரமதாய் மலடாயிருந்தோமே
இடுவார்கள்பிச்சைதன்னைக் கெடுவார்தடுத்தாற்போல்
படுவார்கள்பாடெல்லாம் பட்டோமேயிந்திரரே
அம்பலத்தில்நின்றலையும் அனியாயஞ்செய்தவர்போல்
ஊராருடைமைக்குப் பேராசைகொண்டவர்போல்
தேவர்களெல்லாஞ் சேரமடலானோம்
இந்தப்படிசொல்லி இந்திராணிதான்புலம்ப
இந்திரனுங்கேட்டு இலச்சையற்றுத்தான்வாடி
எந்தவிதியாலே எனக்குமேயிந்தவினை
வந்ததேயென்று மனக்கவலைதான்கொண்டு
மானேகுயிலே மரகதமேநீகேளு
தேனேகனியே தெவிட்டாததெள்ளமுதே
அந்தரம்பைமாதை யடிமைகொள்ளும்பெண்ணேநீ
புத்திரனில்லாமல் பூதலத்தில்வாழ்வதற்கு
வரத்தினையுண்டானாலும் வாழ்வல்லகண்டாயே
சேனைபலதாளச் சிறுவனொருவனில்லை
மைந்தனில்லாவீட்டில் மறையோர்பொசிப்பதில்லை
மகனில்லாவீட்டில் மற்றொருவர்போகாமல்
வள்ளத்தனமயிலே வகையொன்றுசொல்லுகிறேன்
அரனாரைநோக்கி யதிகதவஞ்செய்தாக்கால்
அம்மையுமைபார்வதியால் அதிகதவஞ்செய்தாக்கால்
எல்லாப்பதமும் இயல்புமிகவுண்டாகும்
என்றுமனையாட்கு இப்படியேசொல்லியபின்
துய்யமதியுடையாள் சுந்தரியுமேதுசொல்வாள்
மைந்தனில்லாத மழைகாணாவான்பயிர்போல்
வாடிமிகத்தளர்ந்து மயங்கிமுகம்வாடி
என்றுரைத்தசுந்தரிக்கு இந்திரனாரேதுசொல்வார்

விருத்தம்.

மங்கையேசொல்லக்கேளாய் மைந்தனில்லாமையாலே
சங்கையாய்வாழ்ந்திருந்தோந் தரணியில்வசையுமாச்ச
கங்கைவேணியர்பாதங் கண்டுமேவரத்தைப்பெற்று
இங்குநாம்வருவோமென்றே யேகினார்கைலைமீதில்.

நடை.

சென்றுசிவன் கையிலே சேர்ந்தே இருவருந்தான்
சந்ததியைவேண்டித் தவம்பெறவேவேண்டுமென்று
சங்கரனாரஞ்செழுத்தைத் தங்கள்மனதில்வைத்து
சிவனோடுமையாளைச் சிந்தையிலே தானினைந்து
இந்திரனுந்தேவியுமாய் ஈசுரர்பாற்றேகலுற்றார்
இந்தப்படியே இருபேருமொற்றுமையாய்
கயிலைதானோக்கி கடுகவேதானடந்தார்
கடிதாய்வழிநடந்து கயிலைக்குப்போனார்காண்
தென்கயிலைச்சேர்ந்து சிறந்த இருபேரும்
நந்திதனைக்கண்டு நமஸ்கரித்தாரந்நேரம்
நின்றுகைகூப்பி நெடுமூச்செறிந்துநின்றார்
நெடுமூச்செறிந்துநொந்து நின்றவரைத்தான்பார்த்து
தடுமாற்றநீக்கித் தனதாகவார்த்தைசொல்லி
தேவியுநீயுந் தேடிவந்தகாரியமேன்
தேடிவந்தகாரியத்தைச் செப்புமெனவுரைத்தார்
அவ்வார்த்தைகேட்டு அமரர்கோனேதுரைப்பான்
எவ்வார்த்தையென்று இயம்புவேனடியேன்
சீராயுரைசெய்தாற் சிரிப்பார்களெல்லோரும்
மகனையாசையாலே வருந்திநடந்துவந்தோம்
புத்திரனுமில்லாமல் பொன்னுலகையாண்டிருந்தோம்
பொன்னுலகையாளப் புத்திரனேதானுமில்லை
சந்ததிக்காகத் தவம்பெறவேவந்தோங்காண்
எந்தம்மைக்காத்து இரட்சிக்கவேணுமென்றார்
அந்தமொழிகேட்டு அருள்நந்தியேதுரைப்பார்
வந்ததுநன்றுநன்று மகனுமக்குண்டாகும்
சிவனோடுமையாளைச் சிந்தையிலேதானினைந்து
தவமாய்மிகவுநல்ல தரையில்மிகவூசிவைத்து
ஊசிமேல்நின்று உற்றதவஞ்செய்வீரானால்
சிவனோடுமையாளுஞ் சிந்தைமிகமகிழ்ந்து
சந்ததிபாக்கியமுந் தந்தேயருள்புரிவார்
இந்தப்படிநந்தி யெடுத்துரைக்கஅப்போது
நந்திசொன்ன மொழிப்படியேநாங்கள்செய்வோம்
என்றெனவேயிந்திரனும் நாயகியுமப்போது
ஆற்றில்முழுகி யஞ்செழுத்தைநெஞ்சில்வைத்து
ஊசிநுனியதனில் ஒருகாலைத்தானூன்றி
நின்றார்தவசு திருமலனைத்தானினைந்து
இந்திராணிதானும் இருந்தார்நெடுந்தவசு
இருபேருமொன்றாய் இருந்தார்நெடுந்தவசு
[illegible] மனதில்வைத்து
[illegible]
[illegible]

வேருகளோடி விபன்மரங்களுண்டாகி
பாருக்குள்வேரோடிப் படரததவசசெய்தார்
அந்ததவத்தருமை யாருரறியவில்லை
ஆனபொழுதிந்திரனும் அவன்மனைவிதன்னுடனே
ஏநதப்படிதவங்கள் செய்வோமெனநினைத்து
சுந்தரியாள்தன்னுடனே சொல்லிவிசாரமுற்று
பாதாளந்தோன்றவெட்டி பாம்பாயனல்வளர்த்தி
வேதாள அக்கினிம்பால் மேலேபடர்ந்தெரிய
ஈசனேபிள்ளையருளென்றேதவசிருந்தார்
தண்ணீர்அருந்தாமல் சருகும்பொசியாமல்
இந்தப்படிதவசு இரண்டாயிரம்வருஷம்
அந்தத்தவத்தருமை யாராருந்தானறிந்து
பார்வதிக்குமப்போ பரமனருள்செயதாரே
பெண்ணேயவரருகே போவோமெனவுரைத்து
கண்டார்சிவனுங் கனிவாயுமையாளும்
முப்பத்துமுக்கோடி தேவர்கள்போற்றிநிற்க
நாற்பத்துநாற்கோடி ரிஷிகளும்நயந்துதொழ
தவத்தருமைபார்த்துச் சந்தோஷமுண்டாக
உமையாளும்அங்கே யுத்தரங்கள்சொல்லுகிருள்
பொன்னுலகையாண்டுமிகப் போகம்படைத்தருளி
மன்னுமுடித்தேவரெல்லாம் வந்துத்தொழுதேத்த
இந்தப்படிபலதை யேதுகருத்தான்கொடுத்தீர்
புத்திரனில்லாச்செல்வம போதக்கொடுத்தீரே
புற்றுவளர்ந்து போதமரன்வுண்டாக்கி
கண்ணீரொழுகிறதுங் கண்ணினுற்காணுமென்று
சிவனுரிடத்தில செப்பினுள்பார்வதியும்
உள்ளபடிசொன்னுய் உமையவளேயென்றுரைத்தார்
கள்ளனிவனிந்திரனும கடுங்குற்றஞ்செய்ததுண்டு
மானேயவளுட மனதின்படிசெய்வோம்
தேனேயவனசெய்த தீவினைகள்மெத்தவுண்டு
ஒன்றும்அறியாமல் உபாயமாய்ச்சொன்னதென்ன
ஆனாலுனக்காக அருள்செய்வோங்கண்டாயே
என்றுசிவனர் இரணியுரைத்தனர்காண்
உமையாளுமங்கே யேதுரைப்பாளுன்னைநெஞ்சி
ஈசரேயுமமடியார் ஏதுபிழைசெய்தாலும்
நேயமுடன்தனை நீர்பொறுக்கவேண்டாமோ
என்றுமையாளசொல்ல இறைபேர்னமகிழ்ந்து
மன்றலசெறிவெள்ளி மலைதனிலேவீற்றிருந்த
நந்திதனையழைத்து நல்லதொருபுத்திரனைக்
கட்டிவரச்சொல்லிக் கொடுத்தான்காண்வுத்தரவு
வெள்ளிப்புனைநந்தி விரைவாகதேடிப்பேப்பழைக்க
இந்திரனுந்தேவியுமே இன்பமுடனேமுகந்து

[illegible] இசைப்பதம்பெற்றாலும்
[illegible] புகைகில்போலவேனு
[illegible]ரான்றாருமெனத் தார்வேந்தன்கேட்டதற்பின்
இந்திரனைசந்திரான் தந்தோமெனவுரைத்தார்
[illegible]ந்திதந்த சங்கரனார்சொற்படியே
இந்திரனுந்தேவியுமா யின்புமுற்றமீண்டனரே
மீண்டுமேநாங்கள் விரைந்துவரும்வழியில்
ஊர்பதியைநோக்கி யுலாவிவந்தாரப்போது
காமதேனுநற்பசுவைக் கயிலையிலேவரவழைத்து
பசுவின்முகம்பார்த்து பரமனருள்புரிவான்
சந்ததியில்லாமற் றவசுசெய்தஇந்திரற்காய்
உன்னையவர்களுடன் அனுப்புகிறோமொன்றுசெய்வாய்
அன்புடனேநீபோய் அருகிருந்துதான்வளர்த்து
பாலகனையீன்று பாக்குடனேதான்கொடுத்து
வந்துவிடுநீயும் மாதேயிளம்பசுவே
என்றுசிவனார் இவ்வார்த்தைசொல்லியபின்
நிமலன்றனைப்பார்த்து நெடுமூச்சுத்தானெறிந்து
தோத்திரங்கள்செய்து சொலலுகின்றதப்பசுவும்
பூலோகம்போயிருக்கப் பொறுக்குமோவென்னுடல்தான்
பூலோகம்போயிருந்து புத்திரனையீன்றபின்பு
எனக்குமேமோட்ச கெதியெப்போவெனக்கேட்க
அப்போதேசிவபெருமான் அனபுமிகப்பெருகி
வாராய்பசுவே வருந்திமெலியாதே
புத்திரனையீன்றவுடன் பூந்தோஅனுப்புகிறோம்
உன்னுணைநாமும் உடனழைத்துக்கொள்ளுகிறோம்
என்றுசிவனார் எளிதாயுரைத்தபின்பு
அந்நேரநற்பசுவும் அறிவுமிகவுண்டாகி
போய்வருவேனென்று பொருந்திவிடைகேட்டதற்பின்
அந்நேரமேசிவனார் அன்புவிடைதான்கொடுத்தார்
பசுவுமேயப்போது பரமனருட்படியே
இடியுங்கடலும்போ லெங்குமேதான்முழங்க
அவரடியின்பின்னே யலறித்தொடர்ந்ததுவே

விருத்தம்.

அந்தநற்கயிலைவாசன் அருட்படிகாமதேனு
இந்திரன்பினனேகல்ல விளங்கன்றாய்வேடங்கொண்டு
பந்துபோற்குதித்துமெள்ளப் பாரினில்வந்துமேவ
வந்ததோர்பசுவையிந்திரன் வரிசையாய்த்துதிகொள்வானே.

வசனம்.

அதெப்படி யென்றால் சுவாமிகயிலங்கிரிவாசரான பரமேஸ்வ
ரர்காமதேனுவாகிய பசுவைவரவழைத்துப் புத்திர தவஞ்செய்த இ
[illegible]திரனிந்திராணிக்குப்போயிருந்துபுத்திரனையீன்றுகொடுத்துவா

வென்றுவிடைகொடுக்க அப்போபசுவானது எனக்கு மோட்சகெதி எப்போவென்றுகேட்க பரமேஸ்வரரும் அப்போதபுத்திரனைப்பெற்றுக்கொடுத்தவுடனே பூந்தேர் அனுப்பியுன்னை இவ்விடம்வரவழைத்துக்கொள்ளுகிறோமென்று வாக்குச்சொல்லி விடைகொடுக்கஅப்படியேவிடைவாங்கிகொண்டு இளங்கன்றாகவேடங்கொண்டுஅண்டபுவனங்களெல்லாம் இடிபோல முழங்கத்தக்கதாக பந்துகுதித்ததுபோலே இந்திரன் இந்திராணி போனவழித்தடம்நோக்கி அவர்களிருவரையுங்கண்டவுடனே அவாளிருவரும்பசுவாகியகன்றைக்கண்டு இதுகாரணமாயிருக்குதென்று யோசனைசெய்து சுவாமிகயிலையங்கிரிவாசராகிய பரமேசுரரும் உமையாளும் அனுப்பிவைத்ததாய்க் காணப்படுகிறதென்று இருவரும்ஆனந்தங்கொண்டாடிப்பசுவைக்கட்டி முகந்து தங்கள் கூடவேகூட்டிவருகிறார்கள்-எ-று. அப்பால்நடக்கிற அதிசயங்களை இனிமேல்வெகுவிஸ்தாரமாகச் சொல்லுகிறோம்.

நடை.

வந்ததொருகன்றை வாரியெடுத்தணைத்து
ஆவியெடுத்து ஆகமெல்லாந்தான்குளிர்ந்து
இன்றுநமக்கீசர் ஈந்தருளுஞ்செல்வமென்று
கன்றையெடுத்துக் கடுகவழிநடந்தார்
பூபாலரெல்லாம் பூமாரிபெய்தனர்காண்
மற்றுமுள்ளாரெல்லா மனமகிழ்ந்துகொண்டாட
பிரமாமுதலானோர் பிரியமுடன்பார்த்துநிற்க
நடந்தனரிருவருமே நல்லுலகந்தானோக்கி
ஒருவாக்கொருவர் உவந்துவந்துதான்பேசி
சந்தியாய்வந்தகன்றைத் தான்கொண்டுசென்றார்கள்
பட்டணத்திலுள்ள பரிஜனங்களெல்லோரும்
இந்திரனிந்திராணி யிவர்கள்வரவுகண்டு
சந்தபாக்கியமுந் தான்பெற்றுவாரார்கள்
என்றுசொல்லியப்போ இயல்பாய்ப்பறையறைந்தார்
தேசமெல்லாந்தானறிய சிறப்பாய்பறையடித்தார்
பறையோசைகேட்டவர்கள் பாக்கியம்பெற்றோமெனவே
பட்டணஞ்சென்றமாதர் பதியுமிந்திராணியுமாய்
சிங்காதனத்தில சிறக்கவேதானிருக்க
அப்பொற்பதியான அழகானகற்பகக்கீழ்
செம்பொற்பதியில் சிறப்புடனேதானிருக்க
நல்லதொருசுந்தரியும் நன்றாய்மனமகிழ்ந்து
சங்கரனார்தங்களுக்குத் தயவாகக்கொடுத்தகன்றை
மங்காதகன்றை வளர்த்தெடுக்கவேணுமென்று
தாதியரையழைத்து தயவாயுரைத்தனர்காண்
மானனையீர்நீங்கள் மகிழ்ந்துகொண்டாடி
கானகத்திலோட்டாமல் கனமாய்வளர்க்கவென்று
சாற்றுமந்தவார்த்தைதனைத் தான்கேட்டுத்தாதியர்கள்

போற்றியெடுத்தணைத்து பொன்போல்வளர்க்கலுற்றார்
சீருடனேபோற்றித் திரமாய்வளர்க்கலுற்றார்
ஒருநாளுக்கொருநாள் ஓங்கிவளர்சந்திரன்போல்
அருமையாய்ச்சன்றுதனை அன்பாய்வளர்த்தனர்காண்
பேரிடவேணுமென்று பேர்முகூர்த்தந்தான்பார்த்து
பஞ்சாங்ககாரரையும் பாங்காய் அழையுமென்றார்
வேதப்பிராமணரை விரைந்தேயழையுமென்றார்
சாத்திரவாதியெல்லாந் தாமேயழையுமென்றார்
தபோதனரையெல்லாந் தானேயழையுமென்றார்
கட்டியக்காரர்சென்று கடிந்துமிகவோடி
பாப்பாரையெல்லாம் பாங்காயழைத்துவந்தார்
தபோதனர்கேட்டவுடன் சந்தோஷமாகவந்தார்
சாத்திரவாதியெல்லாந் தானேதான்வந்தனர்காண்
நாளுமுகூர்த்தமும் நல்லதினம்பார்த்திருந்தார்கள்
ஆர்பேரிடுவதென்று ஆலோசனைசெய்தார்
அப்பொழுதுவியாச பகவான் அருளிநின்றுடு
இந்திரன்தாயார் இளங்கொடியாள்தன் பெயரை
இடுமென்றுசொன்னபடி யெல்லோருஞ்சொன்னார்காண்
அந்தப்படிபெயரை அழைக்கவேவேணுமென்று
வைகாசிமாதம் வளர்ந்தஇருபத்தொனதில்
சுக்கிரவாரமதில் சூழ்ந்ததிருவாசகத்தில்
அமுர்தகணயோகம் அன்பாயிருக்குதென்றார்
அந்தப்படியே அவர்கள்மொழிதப்பாமல்
பட்டணமெல்லாம் பதிவாயலங்கரித்து
கோடித்தெல்லோர்க்கும் கொடுத்தாரேதட்சணைகள்
தெட்சணைகொடுத்தவுடன் திருப்பெயரைத்தானழைத்தார்
மாவேத்திரியென்று வரவழைத்தாரப்பசுவை
அழைத்தவுடன் யனேவோருந்தாழுமிட்டார்
மாதானங்கோதானம் வஸ்திரதானமுதல்
வாத்தியங்களெல்லாம் வரிசையாய்த்தான்முழங்க
பதினெட்டுவாத்தியமும் பாங்காய்முழங்கிடவே
நாடகசாலைப்பெண்கள் நாட்டியங்கள்தானுட
வோமங்கள்பூசைகள் ஒன்றுந்தவராதபடி
அன்னதானங்கள்முதல் அன்பாய்க்கொடுத்தனர்காண்
பட்டுப்பட்டாவளியும் பாங்காய்க்கொடுத்தனரே
இந்தப்படியே இருபதுநாள்வரைக்கும்
மைதவழுங்கன்றுக்கு வகையாகப்பணிபூண
பொன்னுலேதும்பும் புரிகயறும்போட்டார்காண்
நாலுகாலிற்குழம்பும் நல்லதொருதங்கமதாய்
மேனியெல்லாந்தங்கமதாம் விரைந்துமேதானழுத்தி
சவர்த்னவகைகளெல்லாம் நன்றாகத்தானழுத்தி
ஆபரணதியெல்லாம் ஆணிமுத்துவயிரமதாய்

கொப்புக்குநல்ல கோமேதகமழுத்தி
நாலுகாலிற்சிலம்பும் நல்லதொருவயிரத்தால்
வாரியேபூட்டி வளர்த்தார்கள்நற்பசுவை!
பாலமுதமூட்டி பதிவாய்வளர்க்கையிலே
பூபந்தற்குள்ளே போற்றிவளர்க்கையிலே
இந்தவரிசையா யிதமாய்வளர்க்கையிலே
கண்ணைப்போற்றிக் கருணையுடனேவளர்த்தார்
நாலிரண்டுநாளையிலே நற்பசுவுந்தான்வளர்ந்து
திங்கட்பிறைபோலச் சீர்பெற்றுதான்வளர்ந்து
பிள்ளையென்றுசொல்லிப் பெருமையுடன்தான்வளர்த்தார்
இந்திராணிசெய்யும்வகை யேதென்றுதான்கேட்கில்
நித்தப்படிநடக்கும் நியமநிஷ்டைசொல்லுகிறேன்
பொய்கைதனிற்சென்று போதவேநீராடி
சிவபூசைதவபூசை செபமுடன்செய்தபின்பு
தங்கச்செம்புதன்னிற் றானேஜலங்கோரி
புட்பாதிகளெல்லாம் போதவேகொண்டுவந்து
பசுவினிடபாதமதைப் பாங்காகச்சுத்திசெய்து
பத்திரபுட்பமதைப் பாங்குடனேதான்சாத்தி
சிவனைநினைத்துத் தோத்திரங்கள்செய்துவந்தான்
இந்தப்படியே யிருக்குமந்தநாளையிலே
பசுவின்முகத்தைப் பார்த்துமனஞ்சலித்து
நெடுநாளுந்தானுச்சே நீயுமெனைப்போலே
நிற்கும்வகையேதென்று நிமலனையேதான்தொழுவான்

விருத்தம்

அய்யய்யோசிவனேநான்செய்யறத்திலுங்கொடுமையுண்டோ
வையகந்தன்னிலேதான் மலடியென்றென்னைவைத்துந்
துய்யநற்பசுவுங்கூடச் சுரப்பிலாமலடாய்நிற்கச்
செய்யுமாறேதோவென்று சிந்தையும்நொந்துசொல்வாள்.

வசனம். அதெப்படியென்றால்தேவேந்திரனும் இந்திராணியும் அதிகத் தவசுசெய்து வரம்பெற்றுத் தங்கள்பதியைநோக்கி வரும்போது சுவாமி உத்தரவுகொடுத்தனுப்பிய காமதேனுவாகிய பசுவானதுந் தங்களிடஞ் சேர்ந்ததைக்கண்டுசுவாமியும்உமையாளும்அநுப்பினுரென்று மகா சந்தோஷத்துடன் அவர்களும் போற்றிவளர்க்க நெடுநாட்சென்றும் நம்மைப்போலே நாம் வளர்த்தபசுவானதும்மலடாய்நிற்கிறகாரணம் என்னமோவென்றுவையகத்திற் பேரெடுத்ததுமல்லாமல் தவசுசெய்து கிடைத்தபசுவும் இப்படி நிற்குதென்று இந்திரனிடத்தில் இந்திராணி நெடுமூச்செறிந்து அவர்களிருவரும்புலம்பித்தவிக்கிறார்கள் என்றவாறு அப்பால் நடக்கும்அதிசயத்தை விவரமாய்ச்சொல்லுகிறோம்.

(நடை) நாம்தாமலடிருந்தோம் நாம்வளர்த்தநற்பசுவும்
தவத்தருமையால்வந்த காமதேனுதான்மலடாம்
மலடாகிநின்ற மயக்கமதைநான்பார்க்க
விதியேயிதுவும் விளம்பீரோவென்றுசொல்லி
இந்திரருங்கேட்டு யேங்கிமுகம்வாடி
நாகமடந்தையரே நானொன்றுசொல்லுகிறேன்
இதுவரையும்பாலன் எமக்குவரக்காணோமே
இன்னமும்நான்போயி யெங்கள்பரமேஸ்வரன்பால்
தவசுசெய்யநான்போவேன் தப்பாதிளங்கொடியே
சங்கரனைநோக்கித் தவசுமிகச்செய்து
வண்மையுள்ளகானகத்தில் மகாதவமாய்நானிருந்து
பூங்காவனந்தேடி போகிறேனென்றுசொல்லி
கமண்டலமும்புலித்தோலும் கையிற்பிரம்புடனே
கப்பரையும்புத்தகமும் கையில்மழுவாளுடனே
பத்தினியக்கினியைப் பாங்காகத்தான்வளர்த்தி
இந்திராணிதன்னிடத்தில் யியல்பாயனுப்பினன்காண்
வந்துமேகானகத்தில் வாய்த்ததவசுசெய்ய
சிவனாரைநோக்கித் தெண்டனிட்டுத்தவசிருந்தான்
இந்திரனுங்கானகத்தி லிசைவாய்த்தவசிருந்தான்
வாசியைநோக்கி வாகாய்த்தவஞ்செய்தான்
அஞ்செழுத்தைநெஞ்சில்வைத்து அரனைமிகநினைந்து
ஆராலுமுடியாத அதிகதவஞ்செய்யலுற்றான்
சற்றுமசையாமல் தவஞ்செய்தானப்போது
முப்பத்துமுக்கோடி தேவர்களுமூத்தோரும்
நிருபன்குபேர நிருதிதிசைபாலகரும்
சந்திரருஞ்சூரியருஞ் சத்தமகாமுனியும்
தேவர்களெல்லோருஞ் சேரவேதான்கூடி
மூவரையுந்தெண்டனிட்டு முறைமையாய்ச்சொல்லுகிறார்
சித்தயிரங்குமையா தேவேந்திரனாரும்
புத்திரவாஞ்சையினால் பூமிமறந்துவிட்டார்
மைந்தனைவேண்டி மகாதவசுசெய்கிறார்
அப்போதரனார் அகமகிழ்ந்துசொல்லுகிறார்
நந்தீசர்தன்னை நயமாகத்தானழைத்து
வள்ளுவனையிங்கே வரவழையுமென்றுரைத்தார்
வள்ளுவனையப்போ வரவழைத்தாரந்நேரம்
செய்யசிவனாருந் திருவாய்மலர்ந்தருளி
சித்திரபுத்திரனை தேடியழையுமென்றார்
சித்திரபுத்திரனைச் சிறப்பாகக்கண்டான்காண்
அத்தனாரும்மை யழைத்துவரச்சொன்னார்காண்
சித்திரபுத்திரருஞ் சிந்தையகமகிழ்ந்து

பாதமதில்வீழ்ந்து பணிந்துகண்டார்புத்திரரும்
தேசம்விளையாடிவந்த சித்திரபுத்திரனே
கணக்காற்பெரியவனே காரியத்தில்வல்லவனே
தேவேந்திரனுமங்கே திகைக்கிறான்பிள்ளையன்றி
மைந்தனைவேண்டி வருந்துகிறானென்றுசொல்ல
சித்திரபுத்திரருஞ் செய்தியொன்றுசொல்லுகிறார்
அரியதவம்பண்ணினாலும் ஆவதுண்டோயிந்திரற்கு
மைந்தன்பிறக்க வழக்கில்லைநாயகரே
என்றருளிச்செய்ய இருந்தவர்களெல்லோரும்
சத்தியருள்கொண்டு தவஞ்செய்தயிந்திரற்கு
புத்திரனைத்தான்கொடுப்பாய் பூதநாதாவென்ன
சிவனாருமங்கே திருவாய்மலர்ந்தருளி
பூமிவிளையாடிவந்த புண்ணியரேநீருமொரு
தீமையைநீக்குமென்று திருவாய்மலர்ந்தருளி
பாலகராய்ப்போய்ப்பிறக்க பரமன்விடைகொடுக்க
புத்திரராகப்போய்ப்பிறக்க சிவனார்விடைகொடுக்க
தேவேந்திரன்வயிற்றிற் சென்மிக்கதன்மமல்ல
இந்திரற்குப்பிள்ளை யொருதவில்லைகணக்கிலென
அந்தமொழிகேட்டு அரனாருந்தான்மகிழ்ந்து
எந்தவகையானாலும் இந்திரற்குஅன்புடனே
செந்தாமரைப்பூ திகைபூர்க்கும்பொய்கையிலே
இந்திராணிதான்வளர்த்த இளம்பசுவுமப்போது
தண்ணீர்குடிக்கத் தான்வருமேயந்நேரம்
தாமரைப்பூவாகத் தண்ணீருடன்கலந்து
ஆவின்வயிற்றில் அவதரிக்கஅற்புதங்காண்
வளர்த்தபசுவயிற்றில் வருவாயெனவுரைத்தார்
ஆகிலடியேன் அருள்பெற்றேனென்றுசொல்லி
கூறுபெற்றேனென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்து
தேவர்முனிவரையுஞ் சிறப்பாகவேயனுப்பி
வாய்புதைத்துநின்று மகவைமிகநோக்கி
செப்புகின்றாரீசரும் சித்திரபுத்திரற்கு

விருத்தம்.

அரனுடனேவாழுந்தேவ ரானதோருயிர்கட்கெல்லாம்
பரமனுடன்பாவபுண்ய பத்திரமெழுதவேண்டிக்
கரமிசையுதித்தசித்ர புத்திரகாணிக்காயென்
றருமையாயவனையீசன் வரவழைத்தருள்செய்வானே,

சித்திரபுத்திரரைச் சிவனுமேவரவழைத்து
புத்திரவாவிதன்னிற் பாங்குடன்பூவாய்ச்சென்று
வச்சிரன்வளர்த்தஆவின் வயிற்றினில்சென்றுபுக்குப்
புத்திரனாய்பிறக்கப் போவெனவிடைகொடுத்தான்

எழுதியகணக்கையும் இறைவன்மால்வசத்திலக்கிப்
பழுதில்லாப்பூமிதன்னிற் புகுத்துரைதெரியவப்பால்
வழுவில்லாதொழுதநாமும் வரமுனக்கருளிச்செய்தோம்
எழுமெனப்பூமிபாரக் கணக்கையுமருவுக்கின்றான். ௩௩

வசனம்.

அதெப்படியென்றால் முன்கயிலாசபருவதத்திலேயும் வைகுண்டத்திலேயும் பிரமலோகத்திலுமுண்டான தேவர்கள்ரிஷிகள் தபோதனர்கள்முதலானவர்கள்செய்கின்ற பாவபுண்ணியகணக்குகளும் பார்த்து சிருட்டிசெய்த சித்திரபுத்திரரை ஈஸ்வரர்வரவழைத்துத் தேவேந்திரன் மகாகோரமாய் அந்தரமாந்தவசுசெய்கிறதைப்பாருமென்றுசொல்ல அப்போசித்திரபுத்திரர் அவருக்குச்சந்தானமில்லையே அவர்எப்படித்தவசுசெய்தாலுமில்லையென்றுசொல்லஅப்போதுவவன் எந்தவிதமாகினும் நீயேபோய்ப்பிறந்து புத்திரவாஞ்சையைத் தீர்க்கவேணுமென்றுசொல்ல இந்திரன்வயிற்றிற்பிறக்க காரணமில்லைஎன்றுசித்திரபுத்திரர்சொல்ல இந்திராணிக்குநாம் அனுப்பியகாமதேனுவாகிய பசுவின்வயிற்றிற்செனித்தாற் குற்றமில்லை அதற்குச்சம்புமகாப்பொய்கையாகிய தடாகத்திற்றாமரைபுஷ்பமாய் அவதரித்தால் அப்பொழுது அந்தப்பசுவானது தண்ணீர்குடிக்கவருந் தண்ணீருடனேபோய் செனித்துபிறப்பாய் உடனேமகவாசைதீரும்பூமியிலுண்டாகிய முன்பாவபுண்ணிய கணக்குகளுஞ் சீராகுமென்றுகணக்கெடுத் தெழுதிக்கொடுத்து எழுத்தாணியுங்கொடுத்து அவடத்திலுண்டான கணக்குங்கருவேலமும்மகாவிஷ்ணுவசம் ஒப்புவிக்கசொல்லியுத்தரவளித்தபடி ஒப்புவித்துப் பின்புசித்திரபுத்திரர் அவ்விடத்திலுள்ள பெரியோர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு சம்புமகாப்பொய்கையில்வந்து அவதரிக்கிறகதை இனிசசொல்லுகிறோம்-எ-று

(நடை) ஈஸ்வரரும்ஈஸ்வரியு மின்பத்துடன்மகிழ்ந்து
எங்கெந்தபுத்தகத்தை யெடுப்பேனென்கோவே
ஆயிரம்பேரானாலும் அசைக்கவொண்ணாபுத்தகமே
ஞானநெறிநீதி மறைநனனூலின்நீடுபுகழ்
பூண்டவர்கள்புத்தகத்தை போயெடுத்துவாருமென
போயெடுத்துவந்து பொற்பலகைதன்னில்வைத்தார்
பொன்னினெழுத்தாணியுடன் புத்தகமுங்கைகொடுத்தா
முற்கணக்கும்பிற்கணக்கும் முன்னேட்டேனுபடியும்
எக்கணக்கும்பார்த்து எழுதுமென்றார்புத்திரரை
யெழுதியநதநாள்வரையில எடுத்துக்கொடுத்தனர்காண்
ஏழுலோககணக்கு மெழுதியிகக்கொடுத்து
பாவிகணக்கும் பஞ்சபாதர்தன்கணக்கும்
நாகலோகத்திலுள்ள நன்மையுள்ளதன்கணக்கும்
பூமிதனில்மாயவனூர் புண்ணியபாவக்கணக்கும்
எல்லாகணக்கும் எழுதியிகக்கொடுத்து
ஆதிபரமசிவன் அண்டரண்டத்தானவருத்து

மூத்தகணபதியும் முதுகுவலமிருக்க
இளையகுமாரன் இடதுபக்கந்தானிருக்க
தேவாதிகளெல்லாஞ் சேரவேதானிருக்க
இருடிமுனிவோர்கள் எல்லாருந்தானிருக்க.
சாதிபதினெட்டுந் தப்பாமல்தான்வகுத்து
எமதர்மராஜன் இயல்காலதூதருடன்
பல்லாயிரங்கோடி பகிரண்டந்தான்வகுத்துப்
புண்ணியபாவம் புதுமையாய்த்தான்வகுத்து
இந்தவரைக்கணக்கை இயல்பாகத்தானெழுதும்
வச்சிரகாயமாய் வரைந்துகணக்கெழுதும்
பத்திரமாயதிகாரம் பலநாளும்உந்தனுக்கே
தப்பாமல்உந்தனுக்குத் தர்மீதாமெனவுரைப்பார்
சந்திரசூரியர்கள் தங்கசெளாழிபோலெனவே
குண்டலமுங்காதிலிட்டுக் கூந்தல்முடிசூட்டி
ஆபரணதியெல்லாம் அழகழகாய்த்தான்பூட்டி
சிவனாரிடத்தில தீர்க்கவிடைவாங்கி
அம்மையுமையாளிடத்தில் அன்பாய்விடைவாங்கி
எண்ணாயிரம்பூதம் எடுக்கவொண்ணாப்பட்டோலை
கூட்டிச்சமைத்துக் கொடுத்தார்களந்நேரம்
கட்டிச்சுருட்டிக் கக்கத்திற்றனிடுக்கித்
தாங்குவாயென்று தானேவரங்கொடுத்தார்
தாமரைப்பூவாகத் தாபித்தார்வுந்தமரை
சித்திரைக்குட்சித்திரையிற் சிறந்தபவுரணையில்
அந்தத்தலைக்கிழமை யாதித்தவாரமதில்
சித்திரபுத்திரனாய்ச் சென்றங்கவதரிப்பாய்
புத்தகமும்மூன்றாலுங் கூடப்பிறக்குமென்றார்
சிவனாருள்படிக்குச் சிரந்தவிடைவாங்கி
அயிராவதங்களென்னும் ஆனைகளைதான்பூட்டும்
ஆகாசத்தேரும் அப்போதுதான்கொடுத்தார்
ஆகாசதேரில் அப்போதுதானேறி
வாராரேயுத்தமனார் வாவிதனைநோக்கி
செண்பகங்களாடுமந்தச் சிறந்ததொருபொய்கையிலே
ஆணிப்பவளம் அடுக்கடுக்காய்தான்விளையும்
வயிரவயிடூரியமும் வச்சிரகோமேதகமும்
புஷ்பராகங்களும் புகளுமந்தப்பொய்கைதனில்
முத்துக்கள்வந்து முழங்குமந்தவாவிதனில்
சங்குகள்சூலங்கொண்டு தவழுமந்தப்பொய்கையிலே
கெருடனுமங்கே கிளைகூடிகொண்டாடும்
மயிலினங்களெல்லாம் மகிழ்ந்துவிளையாடும்
அன்னங்கள்தாரக்கள் அமர்ந்தாடும்பொய்கையிலே
வானரங்கள்பாடி மகிழ்ந்துவிளையாடும்

மாடப்புறாக்களெல்லாம் வரிசையாய்த்தானிருக்கும்
புறுகுடனைப்பிள்ளை பொருந்துமிகவாழும்
சவ்வாதுடன்பிள்ளை தான்மிகவாழும்
கஸ்தூரிபிள்ளை களியுமந்தப்பொய்கைதனில்
கவரிமான்வந்து கலந்துவிளையாடும்
காண்டாமிருகங் குதித்தாடும்வாவிதனில்
புட்பாதிகளெல்லாம் பொலியுமந்தநீராவில்
கனிவகைகளெல்லாங் காய்க்குமந்தபொய்கையிலே
செந்நெல்விளைந்து சிறந்திருக்குமநீராவி
மல்லிகைமுல்லை வாய்த்தசிறுபிச்சிகளும்
இருவாட்சிபிச்சி இருந்துமிகவீசும்
மருவு மருக்கொழுந்து மணம்வீசும்பொய்கைதனில்
ஏலங்கிராம்பும் இலங்குமந்தநீராவி
சாதிக்காய்பத்திரியும் தான்விளங்கும்பொய்கையிலே
மாங்கனிற்றேனருவி வந்துமிகப்பாயும்
வண்டுகள்தும்பிமுதல் மதுவுண்ணும்பொய்கைதன்னில்
மந்திகள்பாய்ந்து மதுவுண்ணும்பொய்கைதன்னில்
செந்தாமரைபூத்துச் சிறப்பிக்கும்வாவிதன்னில்
அல்லிமலரும் அப்படியேதானபூர்க்கும்
சந்திரர்கள்சூரியர்கள் தானுதிக்குமபொய்கைதனில்
ஆதிப்பிரமாவும் அமர்ந்தாடுநீராவி
நாராயணர்முதலா நலமரிஷிகளுமே
முனிவர்முதலாக நல்லரிஷிகளுமே
முனிவர்முதலானோர் முழுகுமந்தபொய்கையிலே
கன்னியர்களெல்லாங் கலந்துவிளையாடுவார்
பழயவினைகளெல்லாம் பறந்தோடுங்கண்டீரே
தீவினைகளெல்லாந் திக்கிட்டுத்தானோடும்
பிணிகள்முதலாகப் பிறக்கட்டுத்தானோடும்
கிழவர்முழுகினால் பாலகராகிப்பிறப்பார்
இந்தவிதமா யிருக்குமந்தப்பொய்கையிலே
சித்திரபுத்திரருஞ் சிரசுகயந்துதித்தார்
தாமரைப்பூவாகத் தான்வந்தவதரித்தார்
இனிமேல்நடக்கும் இக்கதையைக்கேளுமென்றார்
ஏலக்கருங்குழலாள் இந்திராணிதன்றனக்கு
நித்திராதேவி நிறையவேதான்பிடித்து
பஞ்சணைமெத்தையினில் சயனித்தாள்பைங்கொடியும்
அப்போதுசொப்பனங்கள் அழகாகக்கண்டனளே
கண்மகிழ்ந்து கடுகெட்டெழுந்திருந்து
தாதியரைதானழைத்து தானுமேயெடுத்துரைப்பாள்
இந்திராணிப்போலே யென்றன்மடி மீதில்
சந்திரர்கள்சூரியர்கள் தங்கள்ஒளிபோலச்

செம்பொனெழுத்தாணியுடன் சேர்ந்தமைந்தபிள்ளைபோல்
பச்சடம்புநல்ல பால்சுரக்கக்கண்டனளே
காயாதவாழை காய்க்கவுங்கண்டேனே
இன்பம்பெருகி யிருதோளும்பூரித்தேன்
கோட்டைபலாமாமுங் கொழுந்துவிடக்கண்டேனே
பதினாலுலோகமுதல் பண்பாய்கணக்கெழுத
கண்டகனாவுங் கைமேற்பலிக்கவென்று
சிந்தித்துநின்று சிவன்மாதமேதொழுது
வேழமுகத்து விநாயகனைத்தெண்டனிட்டு
மயிலேறும்பெருமானை மனமகிழ்ந்துகொண்டாடி
மூவரையுமங்கே முனாதுமேதெண்டனிட்டான்
சூரியபகவானைத் தோத்திரங்கள்செய்யலுற்றார்
கண்டகனாப்படியே காதினியிற்கொண்டாடி
குண்டலங்கள்மின்னக் குமாரன்வந்துதோன்றுவதால்
பொற்கனமாரி பொழிந்திடுங்களெல்லோரும்
என்றரனார்பாதம் எந்திப்பதிந்துநின்று
இந்திராணிதான்வளர்த்த இளம்பசுவையந்நேரம்
தும்புதரித்துவிட்டார் சூரியனுமப்போது
கட்டவிழ்த்துக்கொண்டு கடுகப்புறப்படவே
இந்திராணியம்மை யிலங்கோதையோடிவந்து
முத்திமுகர்ந்து முகத்தைமிகத்தடவி
நான்மலடியென்று நாடெல்லாந்தானறியும்
என்னோடேகூடே நீயுமலடாகாமல்
இனத்துடனேகூடி யின்பமுறமேய்ந்திடுவாய்
வனங்கள்தனிலே வளர்மிருகமெத்தவுண்டு
இனத்தாரைவிட்டு இனம்பிரிந்துமேயானால்
எல்லைகடவாமல் இளம்பயிரைத்தின்னாமல்
ஈனாதசாலி யிளஞசாலிதின்னாமல்
குலையோடேயாமணக்கை கொழுந்தோடருக்காதே
சோளக்கதிரைக்கண்டாற் சுற்றியேமேயாமல்
எளக்கடுகுநாய்கடுகு எறிட்டுப்பாராமல்
கள்ளிகளைத்தின்னாமல் கண்டயிலுமேயாமல்
இத்தனையும்நீக்கி யிதமாகத்தான்மேய்ந்து
மாலைகருக்கருத்து மையிருளாகுமுன்னே
எல்லைக்குவந்துவிடு என்மகளேயென்றுசொல்லி
இந்தப்படியே பிசைந்தபுத்திதான்சொல்லி
மேய்ந்துவாவென்றுசொல்லி விட்டாளேயப்பசுவை
மேய்ந்துவருவதற்கு மெய்குளிர்ந்தேயப்பசுவு
சிலம்புகலகலெனச் செஞ்சலங்கையோசையிட
ஆபரணத்தோடே யசைந்தேவிளையாடி
அடிமேலடிவைத்து அன்னம்போல்தானடந்து

காட்டோடேசென்று கடுகவேதான்மேய்ந்து
பொற்புல்லுந்தின்று பணப்புல்லுந்தானுருகி
தண்ணீர்தாகத்தை தான்பொறுக்கமாட்டாமல்
கண்ணாயிரமுடைய காவலனார்சோலையிலே
இந்தப்படியே யிருக்கிறநேரமதில்
சிவனாருமங்கே சித்தமகிழ்ந்தன்னேரம்
அலைகடலிலேயுதிக்கும் ஆதித்தபகவானை
விரையவேதானழைத்து விடைதந்தாரென்னவெனில்
தேசமதையாளுந் தேவேந்திரன்தேவி
பிள்ளையாய்தான்வளர்த்த பெரியதொருபசுவும
சம்புத்தலத்திற் றனிற்குஞ்சோலையிலே
திக்குத்திசைகள் தெரியாமல்நிற்குதுகாண்
வழித்தடங்கட்டி வரும்போதுவாவியிலே
தண்ணீர்குடிக்குந் தருவாயில்நீதானும்
செந்தாமரைபூவைச் சிறப்பாகமுன்னிடுவாய
என்றரனார்சொல்ல ஏற்றபகவானும்
திகைத்தபசுவுக்கு தெரியவழிகாட்டிடவே
வழியின்படியே வந்ததுவேநற்பசுவும்
சம்புமகாப்பொய்கை தன்னருகேவந்துநின்று
பொய்கைதனைக்கண்டு பூரித்துஆகமெல்லாம்
சுற்றிவலம்வந்து துய்யதிருநற்பசுவும்
தங்கப்படித்துறையைத் தான்கண்டேயங்குள்ள
புதுமைகளெல்லாம்பார்த்து பூரித்திருந்தோனும்
ஆவலுடன்தண்ணீர் அருந்துமந்தவேளையிலே
தப்பாமல்சூரியனும் தாமரைப்பூப்பரித்து
போடவேதான்தின்று பொறிகலங்கச்சூலாகி
வால்விசிக்கரையேறி மயங்கியேசூலாகி
முட்டுகளுந்தானசைந்து முகமுமிகக்குழைந்து
வாயில்நுரைதிரண்டு மயிர்க்குச்சுதான்தெரிந்து
முட்டிமுணங்கி முன்வயிறுதான்தள்ளி
நாலுதிக்கும்பார்த்து நடுங்கிவழிநடந்து
காதுமடைத்துக் கண்ணுமிருளாகிச்
சிவனாரையங்கே தோத்திரங்கள்செய்துமெள்ள
எல்லைதனில்வரவும் ஏங்கிமிகத்தளர்ந்து
செட்டியார்கள்வீதியிலே சென்றுமேகால்மடித்துப்
படுத்ததேயப்போ பலபேருமோடிவந்து
நாடாளுமிந்திரற்கும் நாகமடந்தையற்கும்
தேடாதிரவியமே சிறந்தமகாதேவியம்மா
மயிலேநீபோமிடத்தில் மலைநாகந்தீண்டியதோ
மாயமிருகம் வளைந்துவெரட்டினதோ
நச்சுப்புல்லுத்தின்றதுவோ நாகங்கடித்ததுணம்டா

என்றுபுலம்பி எல்லோருமோடிவந்து
விஷத்துக்குப்பார்த்து மேல்தடவிநீறுமிட்டு
செட்டிச்சிகளெல்லோரும் சிறக்கவேயோடிவந்து
சந்தனக்குங்குமந் தானுமிகக்கொண்டுவந்து
ஆவின்மேலெல்லாம் அடைவாகத்தான்பூச
அப்போவொருதாதி யானதொருவார்த்தைசொல்வாள்
பசுவின்வடிவல்லப் பாலன்வடிவென்றுசொல்லிக்
கழுநீரும்புல்லுங் கலந்துகுடிக்கவைத்துச்
சந்தனமும்பன்னீருந் தானுமிகப்பூசி
ஆலவட்டங்கொண்டு அருகிருந்துதான்வீச
சுற்றித்திரைகட்டி சூழவேகாத்திருக்க
தாகந்தெளிந்து தானவிழித்துப்பார்த்தவுடன்
பசுவின்வயிற்றில் இருக்குமந்தப்பாலகனுஞ்
சிறப்பாய்பிறந்திருக்க வேணுமென்றார்செட்டிச்சிகள்
என்றபொழுதே யெழுந்துதோர்பசுவும்
செம்பொன்மணிமண்டபத்திற் சேரவேவேணுமென்று
ஆசாரமேறி அசையாமணியடித்துத்
தங்கமணித்தூணோடே சாய்ந்ததுகாண் அந்நேரம்
இந்திராணர்தேவி யிளங்கோதைதான்கேட்டு
அசையாமணியை யசைக்கவந்தகாரியமேன்
இந்திரரும்போனார் தவத்துக்கேயென்றுசொல்லி
எந்தவிதமோ தெரியவுமாட்டுதில்லை
பாருங்களென்றுசில தாதியரைவிட்டாள்காண்
போனார்கள்தாதியர்கள் பொற்கொடியாள்சொற்கேட்டு
வந்துமேபார்த்து மறுபடிதான்சொல்லலுற்றார்
நாகமடந்தையரே நல்லதொருதேவியரே
வளர்த்தபசுவந்து மயங்கிக்கிடக்குதென
எண்ணத்தொலையாத ஏற்றபசுக்களுண்டு
எந்தப்பசுவென்றுகண்டீர் ஏந்திழையீர்சொல்லுமென
கண்கள்பவளமுமாய் கண்டவர்க்குநல்லுரவாய்
நெற்றியிலேவெள்ளையுமாய் நிறமெல்லாம்பொன்னிறமாய்
என்றமொழிகேட்டு ஏங்கியேயோடிவந்து
சிங்காதனத்தைவிட்டுத திரும்பியேயோடிவந்து
காருவினண்டையிலே கதறியேயோடிவந்து
தேனேமரகதமே தியக்கம்வந்தகாரியமேன்
மானேமரகதமே மயங்கிடுவதென்னவென்று
துயரத்துடனே சொல்லுவாளிந்திராணி

விருத்தம்.

அந்தீனன்னடைந்ததுண்டோவாலுரைத்தவிர்த்ததுண்டோ
சிந்தையாய்ப்பெரியோர்முன் நால்வகைமுறைதவறினோமோ
கந்தன்மாலயன்வேறென்று கருத்தினில்நினைந்ததுண்டோ
உந்தன்முன்னோர்கள்செய்த இகழ்வினைமுடிந்தவாரோ.

நடை.

மானேயுனக்கு வஞ்சனைகள்செய்ததுண்டோ
கொள்ளிக்கண்ணியான கொடும்பாவிபார்த்தாளோ
மலைமீதிலேறி மலைப்புல்லுத்தின்கையிலே
விஷங்கள்கடித்ததுண்டோ விள்ளுவாயெந்தனிடம்
உந்தன்றிருமேனி யுள்ளடைந்துவாடுவதேன்
இந்தவிதிவருமோ அறியேனேயென்றுசொல்லி
குங்குமச்சந்தனமுங் கூட்டிக்குழம்புசெய்து
செங்கையால்வாரித் தெளித்தாளேயுத்தமியாள்
அப்போதுகூடத் தீரவில்லையம்மயக்கம்
காடிக்கழுநீருங் கஞ்சியுந்தான்கலந்து
விட்டபொழுதே குடித்ததுவேநற்பசுவும்
பாரக்களைதீர்ந்து பார்த்துமேயந்நேரம்
கண்கள்பொரிபறக்குங் காலசந்துவால்சுற்றும்
மானகதைப்பார்த்து மனதையருவருக்கும்
பூமியைப்பார்த்துப் பொறிகலங்கிச்சிறிநிற்கும்
ஆனந்தமாகியதிராகடனமிடும்
சிவசிவாவென்று திகைத்துநெடுமூச்செறியும்
அரகராவென்று அலறுமதைத்தான்கண்டு
தேவியுமங்கே திகைத்துமொழிசொல்லுவாள்காண்
பசுவுக்குவந்தநோய் பார்த்தறிந்துசொல்வோரைக்
கூட்டிவாவென்றாள் கோதைமயிலாளும்
ஆயர்இடையர்தம்மை யழைத்தோடிவந்தார்கள்
வந்தவர்களப்பசுவை மதியோடேதான்பார்த்து
சொல்லுவாரந்த தோகைமயிலாட்கு
ஆரமுலைப்பசுவு மடங்கிமிகச்சூலாச்சு
இன்றுநாளையீனு மீற்றுமயக்கமிது
என்றுதான்சொல்லி யேகினாரப்போது
பசுவின்மயக்கத்தைப் பார்க்கமுடியாமல்
கோவிற்கால்தன்னிற் கொண்டுவாவென்றுரைத்தாள்
தாதியர்கள்கூடித் தானெடுத்தாரப்போது
கொண்டுவந்துவிட்டார்கள் கோவின்கால்முன்பாக
சூழநிறைந்து தூயமிடம்பண்ணுவித்து
வாய்த்தபரிகாரிகளை வரவழையுமென்றுரைத்தாள்
பரிகாரிகள்வந்து பணிந்துமேதெண்டனிட்டார்
கோவைப்பிழைக்கவைத்தால் கோடிதனங்கொடுப்பேன்
என்றமொழிகேட்டு பேற்றபரிகாரிகளும்
காட்டுமருந்துங் கடுமருந்துமொருகோடி
சிவனைநினைத்து தோத்திரங்கள்செய்கிறாள்
அபயமபயமென்றாள் அல்லமொழிப்பாவையென்றாள்
செங்கைசிவப்பத் திருவயிற்றிலேயறைந்தாள்

அய்யோவோவென்று அடித்துவிழுந்தழுதாள்
அப்போசிவனும் அங்குள்ளதேவர்களும
கயிலாசமீதிருந்து கண்டார்களந்நேரம்
வானுலகந்தனை வழிதிறந்துபார்க்கலுற்றார்
வைகுண்டலோகம் வழிதிறந்துபார்த்தார்கள்
அநியாயமோவென்று அலறியழுதகுரல்
மகாதேவர்தானும் மனதாரக்கேட்டதனபின்
சிவபெருமானங்கே திருவாய்மலர்ந்தருளி
சிவபெருமானீஸ்வரியைத் திரும்பிமுகம்நோக்கி
போய்நீயுமையே புகழ்ந்துகுறிசொல்லென்றார்
பத்தினியாய்ச்சென்று பகுத்துரைப்பாயென்றருள
அந்தயுமையவளும் அரனாருட்படியே
கொக்கிறகுசூடிக் குறமாதுதன்னைப்போல்
பொற்கூடைபொற்பிரம்பு பொற்குடுக்கைதானெடுத்து
பாடிநடந்துவந்தாள் பார்வதியாள்நற்குறத்தி
பாடியிருந்து பரமனிருதாள்பணிந்து
இருந்தவளைப்பார்த்து இறைசிவனார்சொல்லுகிறார்
குன்றுமலைச்சி கொடிச்சிகொடியிடைச்சி
வள்ளிக்குறமாமி மலையரசன்மகளே
என்றனதுகைபார்த்து ஏற்றகுறிசொல்லுமென்றார்
குறிகளுமப்போது குறமாதுசொல்லுகிறாள்
மண்ணுஞ்சுமந்ததுண்டு மரத்தாலடியுமுண்டு
சிறுத்தொண்டர்பிள்ளைகறி உண்ணப்போனதுண்டு
மண்டோதரியுடனே வாளரக்கன்மாளிகையில்
கூடியேவந்து குழந்தையாய்ப்போனதுண்டு
ஆரூரில்சோழன் அருமைமகனையன்று
தேரூர்ந்துகொன்றெழுப்பச் செய்ததுந்தானுண்டு
பின்னையொருமைந்தன பெருவயிரன்தானுமவன்
அன்னைபிதாவுக்கு முன்னேயவன்பிறந்தான்
இப்படியுநல்லகுறி இசைவாகத்தோனுதென்றாள்
அப்போதுசிவனு மருளுவாருத்தமிக்கு
கொச்சைக்குறத்தி குறிப்பார்க்குஞ்சிற்றிடைச்சி
கழுவிலிருந்து கைகாட்டினார்தங்கையரே
உழுதுதிரிந்தபன்றி யுங்களண்ணன்தானல்லவோ
ஆச்சியர்கள்வீட்டில் அடியுண்டுகட்டுண்டு
வெண்ணெய்திருடியுண்ட வெறியன்றங்கையல்லோ
புன்னைமரத்திற் போயொளித்தார்தங்கையல்லோ
என்றேயிருபேரும் ஏற்றபடிகொண்டாடி
சந்தோஷமாகித் தாயேவிடைகொடுத்தார
திருவாபரணமெல்லாம் பூட்டிச்சிவனாரும்
போய்வாரேனென்று புனிதர்விடைபெற்று
மாகாவமந்நேரம் வாவலாங்கிட்டிறங்கி

தேவேந்திரலோகஞ் சென்றாள்குறமாது
மைவாழ்குறத்தி வானவர்தன்கோவில்வந்தாள்
இந்திராணியம்மை யெங்கிருக்கிறாளென்றாள்
இந்திராணிகண்டு யெழுந்துமேயோடிவந்து
வாராய்குறமாதெனவே வந்தேனெனவுரைத்தாள்
பாராய்குறத்தியம்மா பசுவைப்பிழைபித்தால்
வேண்டியதெல்லாந்தருவேன் விதவிதமாய்க்கொடுப்பேனென்னச்
சொன்னவுடனே சொல்லுவாள்குறமாது
குறமாதுதானுங் குறிசொல்லஇந்திராணி
ஆசனங்கள்போட்டு அடிபணிந்துகேட்கலுற்றாள்
குறமாதுதானுங் குஞ்சிரிப்புகொண்டருளி
விநாயகபூசைசெய்ய வேணுமென்றுதானசொல்லி
வேண்டியதெல்லாம் வேணபடித்தான்குவித்து
விநாயகனைத்தானினைந்தாள் வெள்ளிமலைக்குறத்தி
கணபதியுமங்குவர கனமாய்படைத்ததனை
உருட்டித்திரட்டியொரு உண்டையாய்ப்பிடித்து
கவளங்கொடுக்க கணபதியும்வாங்கியுண்டார்
சிங்கிபடித்துச் சிரித்தாள்குறமாது
கேளாயோயென்குறியும் கேவலமென்றெண்ணாதே
எந்தன்குறிதானும எள்ளளவுந்தப்பாது
செங்கைவடிவேலவனென் சிறுமைந்தன்கண்டாயே
மூத்தமகனுமந்த மூர்த்திவிநாயகன்காண்
கந்தமருமகள் வள்ளிதானுமவள்வாமி
ஆரூர்சடையீசர் அவருடையபத்தினியாள்
பரமேஸ்வரருடைய பார்வதியும்நான்தாண்டி
நின்னுடையசிந்தையிலே நினைத்தபடிசொல்லுகிறேன்
வானுலகமாளாமகன் வருவானென்றனுக்கு
அன்புடனேகேளாய் ஆனகுறிதானும்
இம்மையிலும்மறுமையிலு மென்குறிகள்தப்பாது
ரத்னமுடிசூடி நல்லமைந்தனும்வருவாய்
பெற்றிடுவீர்இப்போது பெருமாள்திருவருளால்
கண்ணிறைந்தபாலகனார் கணக்கெழுததோன்றுகிறார்
நீலகண்டர்தம்மருளால் நினைத்தபடிகிடக்கும்
வளர்த்தபசுவயிற்றில் மைந்தர்வந்துதோன்றுகிறார்
கோவின்வயிற்றிற் குமாரன்வந்துதோன்றுகிறார்
சித்திரைக்குச்சித்திரையிற் சிறந்தபவுரணையில்
அத்தன்தலைக்கிழமை பாதித்தவாரமதிற்
புத்தகமும்பூநூலும் பொருந்தியபொற்குண்டலமும்
ஆயிரங்கிளிங்கிலியர் அசைக்கவொண்ணாப்புத்தகமும்

எழுத்தாணிகைபிடித்துப் பிறப்பாண்டியென்மகனே
உததளமாய்வெந்நீரும் ஒளிநந்திருவமுதாய்ச்
சித்திரபுத்திரர்வந்து செனிக்கிறார்மாமயிலே
பூலோகர்ஆளப் பிறக்கிறார்பொற்கொடியே
எறும்புகடையானை தலையெல்லாமெழுதவல்லார்
புத்தகமுந்தன்னிற் புகழ்ந்தெழுதும்புண்ணியனார்
அருளுஞ்சிவனுக்கும் ஆனமகாவிஷ்ணுவுக்கும்
வகுக்கும்பிரமாவுக்கும் வாழ்விக்குமலட்சுமிக்கும்
கணக்கராய்த்தானிருந்து காரியமெல்லாம்பார்ப்பார்
இப்படியாக இருப்பான்காண்ஏந்திழையே
அரனார்கருவேலம் அவர்கையிலிருக்குதுகாண்
இந்திராணிமாதே யிக்குறிபொய்யாதெனவே
இன்பத்தோடுங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
குப்பல்குப்பலாகப்பொன குவித்தாளேயேந்திழையாள்
அன்னேரந்தான்குறத்தி யவள்முகம்பார்த்துரைப்பாள்
உன்னுடையஅன்பு இருந்தாலும்போதுமினி
பொன்னும்பணமும் புலையன்படைக்கிலையோ
நிறைநாழிமுகத்தை நேரேகொடுவென்றார்
மங்கையரேபோய்வாரேன் மகாதுயரமுந்தீர்ந்து
மகனுடனேநீயு மகிழ்ந்துமேவாழ்ந்திருப்பாய்

விருத்தம்.

உமையவள்குறிகள்சொல்லி யுரைப்படிமுடியுமென்று
சமையநல்லிந்திராணிக்குந் தானுமேமனதைதேற்றி
அமையவேவரத்தையீந்து அடைவுடனரன்பாற்சென்று
உமையவள்நடந்ததெல்லா முரைத்தவனிடத்துற்றாளே.

நடை.

அப்பால்நடக்கு மதிசயத்தைக்கேளுமென்றார்
நாகமடைந்தையரும் நல்லகுறியென்றுசொல்லி
பசுவின்வயிற்றிற் பாலன்பிறப்பதுதான்
நிச்சயமாயெண்ணி நினைவுகளைவிட்டுவிட்டு
கொலுச்செய்யுமண்டபத்திற் கோதையும்வீற்றிருந்து
வானம்புவலோக மண்பூமியுள்ளதெல்லாம்
சிறப்பிக்கவேணுமென்று சீரானவள்ளுவனை
பறையுமென்றபோதே பறைத்தங்கேவிட்டார்கள்
பசுவயிற்றிலிப்போது பாலன்பிறக்குதென்று
ஏழுலோகத்திலுள்ளோ ரெல்லோருந்தாமறிய
பறைசாற்றுமென்று பைங்கொடியாள்சொன்னவுடன்
வள்ளுவனுமப்போது வாகாய்ப்பறையறைந்தான்
தெருவீதிகளெல்லாஞ் சிறக்கவேபந்தலிட்டார்

முத்துவளைந்து முகப்பந்தலிட்டார்கள்
வயிரக்கால்நாட்டி வகைவகையாய்தானிறுத்தி
தங்கத்தாலோடுசெய்து சதிர்ப்பந்தல்போட்டார்கள்
பவளத்தால்காலும் பண்பாகத்தானிறுத்தி
விதவிதமாய்ப்பந்தல் வேடிக்கையாய்செய்து
இந்திரன்நற்சபைக்கு எதிரானதென்புறத்தில்
அன்பதுகாதம்பரப்பில் அகலமுள்ளபந்தலொன்று
தங்கத்தால்கால்கள் சதிராகத்தானிறுத்தி
வெள்ளியினுற்கால்கள் விதவிதமாய்த்தானிறுத்தி
நவரத்னத்தாலே நன்றாகத்தானழுத்தி
சித்திரவிஸ்தாரமாய்ச் செய்யவேவேணுமென்றாள்
பத்திபத்தியாகப் பண்பாகசெய்தார்காண்
தேவாதிதேவரெல்லாஞ் சிறக்கவேவந்திருக்க
தபோதனர்களெல்லாருந் தானுமேவந்திருக்க
முனிவர்களெல்லாரு முக்கியமாய்த்தானிருந்து
அந்தணர்களெல்லோரும் அப்படியேதானிருக்க
சங்கீதமேளமுதற் றப்பாமல்வந்திருக்க
பட்டணத்திலுள்ள பரிசனங்கள்தானிருக்க
வகைவகையாய்ப்பந்தி வகுக்கவேணுமென்றாள்
பத்திபத்தியாகப் பண்பாகச்செய்யுமென்றாள்
அந்தப்படியே யடைவாகச்செய்யலுற்றாள்
பிள்ளைபிறந்தப் பெருமுகூர்த்தம்வந்ததென்று
ஏழுலோகமறிய இடிபோல்முரசடித்து
வாருமென்றபோதே வள்ளுவனும்பறைசாற்றத்
தேவர்முனிவர் சிறக்கவேவந்தார்கள்
தபோதனர்கள்முதறிவோர் தப்பாமல்வந்தார்கள்
ரிஷிகள்முதலாக எல்லோரும்வந்தார்கள்
அந்தணர்களெல்லாம் அப்படியேவந்தார்கள்
பட்டணத்திலுள்ள பரிசனங்கள்வந்தார்கள்
கூன்குருடுசெவிடூமை கும்பலாய்வந்தார்கள்
அவரவருக்கெல்லா மயிராணியப்போது
தானங்கள்வாங்கத் தான்வந்திருந்தார்கள்
வந்தபேர்க்கெல்லாம் வடிவாசனங்கொடுத்து
திருமஞ்சனங்கள் சிறப்பாகக்கொண்டுவந்தார்
மாணிக்கச்சங்கு வலப்புறத்தேநின்றூத
வேதப்பிராமணர்கள் வேதங்கள்தானோத
மங்கையர்கள்வந்து வாழ்த்திகுறவையிட
கன்னியர்களெல்லாங் காவலாய்ச்சூழ்ந்துநிற்க
அங்கயற்கண்ணம்மை யருகிருந்துகைகொடுத்த
பார்வதியம்மை பண்பாகவந்தார்காண்
பொன்னின்கலமேந்திப் புறப்பட்டாள்பூமாது
மன்னர்பெருமான் வருகிறஅதிசயங்கள்

## நயினார் சிறப்பு.

ஆயிரங்கிங்கிலியர் அசைக்கவொண்ணாபுத்தகமும்
பொன்னினெழுத்தாணியுமே பொற்பாகக்கைபிடித்து
காதிலிருக்குண்டலமும் கனக்கவேதான்பூட்டி.
அரனார்திருவருளால் ஆவின்வயிறுவிட்டு
பொன்னினகலத்திற் பிறந்தார்புகழ்வீரர்
மின்னினொளிபோலே வெளிப்பட்டாருத்தமனார்
பூமிவழிசிறக்கப் போர்வேந்தர்வந்துதித்தார்
பாவப்புண்ணியங்கள் பதிந்தெழுதவந்துதித்தார்
ஏடும்பிடித்து இடதுகையில்வெண்ணீறும்
காதிலேயிட்ட கவரமணிக்குண்டலனார்
காரிந்திரன்மைந்தர் கணக்கறிவரென்பாரும்
எந்தவுலகி லிருந்தவர்களென்பாரும்
பிரமாவோவென்று பெருத்தமொழியுரைத்தார்
இப்படியுஞ்சிலபேர் ஏற்றமொழியுரைத்தார்
திருவழகைச்சொல்லத் தேவரால்கூடாது
எல்லாக்கணக்கு மெழுதவென்றுதான்பிறந்தார்
நமசிவாயவென்கிற நலனுமசிதமுடன்
நமனுக்கதிகாரி நானென்றசத்தமாய்
சித்திரபுத்திரருஞ் சிறப்பாகவந்துதித்தார்
தெய்வலோகப்பெண்கள் சிறக்கக்குறவையிட்டார்
பெண்களெல்லாங்கூடிப் பெருங்குரவையிட்டார்கள்
கன்னியர்களெல்லாங் கனக்கக்குரவையிட்டார்.
பதினெட்டுவாத்தியமும் பாரெங்குந்தான்முழங்க
பூமாரியெங்கும் பொழிந்தார்கள்தேவரெல்லாம்
தேவரமிர்தந் திருச்சங்கில்தானேந்தி
சேனையுமங்கே சிவனுமையாள்தான்கொடுத்தாள்
இந்திராணிதானும் இளங்கோதையன்னேரம்
திருவாயவிளங்கித் தீர்த்தமுந்தானூடி
பட்டையுடுத்திப் பகவானைத்தெண்டனிட்டு
பிள்ளையைவாரி முகத்தோடேமுத்தமிட்டாள்
அப்போதுபச்சடம்பா யாச்சுதவள்மேனியெல்லாம்
பாலுமுலையிரண்டிற் சுரந்ததுகாண்பைங்கொடிக்கு
தான்பெற்றதுபோலே தான்கையிற்போனாள்காண்
அப்போதொருதாதி யறிவாளெழுந்திருந்து
காயங்கடைசரக்குக் கனமாகவுள்ளதெல்லாம்
கூட்டியேதானுங் கொடுத்தாரேகோதையற்கு
அப்போதவைவாரும் அங்கேதானோடிவந்து
மைந்தனைக்கையாலெடுத்து மடிமீதில்வைத்திருந்து
வாகால்துருவி வாயிற்செவிமூக்கெடுத்து
சேனையெடுத்துச் சுரிகுழலார்கைமேந்தி

தொப்புளறுத்து குலவைமிகமுழக்கி
ஈரந்துவட்டி யிணையாடைதான்போட்டு
பஞ்சாடைக்குள்ளே பலகலைதானமர்த்தி
வேண்டுமுபசாரம் விசம்சிதமாய்செய்தபின்பு
தேவேந்திரன்வரனை காணுமெனநினைத்து
இந்திராணிதான்புலம்பி ஏங்கலுற்றாளந்நேரம்
பாலகனைப்பார்ப்பதற்கென் பத்தாவைக்காணவென்று
அப்போசிவனாரு மங்குள்ளதேவர்களும்
வந்தவுடனே மகனைத்தான்வாங்கி
தாங்கியெடுத்துக் கழுவிமுத்தந்தானுமிட்டு
கண்டான்மகன்முகத்தைக் கண்ணாயிரத்தாலே
உண்டானசந்தோஷ முரைக்கமுடியாது
அந்நேரமிந்திரனும் அழகனைகாதியமே
சுந்தரியாளிடத்திற் கொண்டுபோமென்றுசொன்னார்
ஆவலுடன்வந்து அரியமகனார்க்கு
தெய்வப்பிராமணரைத் திரும்பியழைத்தார்கள்
பிறந்ததைவிபரம் பிசகாமற்கேட்டவுடன்
இங்கப்படியா யிருக்குமந்தவேளையிலே
நவக்கிரகமெல்லா நயமானநாளொன்றில்
பேரிடவேணுமென்று பெரியதொரு இந்திரனும்
சித்திரையில்வந்ததினாற் சித்திரபுத்திரரென்றாற்
அப்படியேபேரை யழைத்தார்களந்நேரம்
சிறிட்டபாற்பசுக்கள் சிறப்பாய்க்கொடுத்தனர்காண்
தானதருமங்கள் தான்கொடுத்தாரந்நேரம்
மகனையன்றுபெற்றெடுத்த வாய்த்ததொருபசுவும்
மகனுக்குபாலமுர்தம் வாஞ்சையாய்தான்கொடுத்து
நிற்குமளவில் நினைவுமறந்தொருநாள்
பாலகன்நெஞ்சிற் பசுக்குளம்புபட்டவுடன்
இந்திராணிகண்டு ஏங்கிமிகப்பயந்து
மகனையெடுத்து மார்போடேதானணைத்து
இந்திராணிதானும் இளம்பசுவையந்நேரம்
காத்தாலடித்தவுடன் கண்சிவந்துதான்பசுவும்
இடமுடையால்பசுவுந் தெய்வமேசாட்சியென்றார்
சரணஞ்சரணமையா தற்காத்துக்கொள்ளென்று
சிவனைநினைந்து தோத்திரங்கள்செய்ததுவே
அப்போசிவனும் அங்குமுள்ளதேவர்களும்
பசுவையடித்த பாதத்தைத்தான்தெரிந்து
இந்திரவிமானத்தை யெடுத்துக்கொண்டோடிப்போய்
இந்தட்சணம்பசுவை இங்கேயழையுமென்றார்
தேர்கொண்டுவந்தார்கள் தேன்மொழியாள்வாசலிலே
வந்தவுடன் அப்பசுவு மகதேவரைப்போற்றி
தேரின்மேலேறிச் சிவனாரிடஞ்சேர்ந்து

இந்திரர்க்கும்பிள்ளை கொடுத்துவாவென்றுரைத்தீர்
பாலனையின்று கொடுத்தேன்பரிவுடனே
கொடுத்தவுடனென்னைக் கோதையாள்தானடித்தாள்
வந்துவிட்டேனென்று வருந்தியுரைத்ததுவே
சிந்தைமகிழ்ந்து சிவனாருமேதுசொல்வார்
உன்மகனையிங்கே யுனக்கழைத்துநான்தருவேன்
வஞ்சமில்லாமல் மனமகிழ்ந்துநில்லென்றார்
அப்படியேநற்பசுவும் ஆனந்தங்கொண்டதுவே
இப்பால்நடக்கின்ற இவ்வசனஞ்சொல்லுகிறேன்
தேசருமிந்திரருந் தேவியுந்தானேதுசொல்வார்
பாலன்பசித்துப் பதறியழுதவுடன்
பாலசுதம்வாங்கப் பகவானைத்தேடுமென்றார்
பசுவைமிகத்தேடிப் பார்த்தார்களெல்லோரும்
காடெல்லாந்தேடிக் காணோமெனவுரைத்தார்
இந்திராணியான இளங்கோதைதானழுதாள்
இந்திரனுமப்போது இயங்கிமிகவாடி
மாயையாய்வந்து மாயையாய்ப்போச்சுதென்று
மற்றுமொருபாற்பசுவின் பாலமுதைமைந்தனுக்கு
குற்றம்வராதபடி கொடுத்துவளர்த்தனரே
பாலகர்க்குத்தொட்டிலைப் பாங்காகச்சாய்ப்பார்காண்
வயிரம்வயிடூரியத்தால வகைவகையாய்ச்செய்தார்காண்
சித்திரபுத்திரரைச் சீர்சிறந்ததொட்டிலிலே
வைத்துத்தாலாட்ட மன்னவருஞ்சொன்னவுடன்
ஆவின்பாலூட்டி யரியதொட்டில்மேற்கிடத்தி
தொட்டிலைத்தானசைத்துச் சூழநின்றதாதியர்கள்
இந்தநல்லதொட்டிலிலே என்மகனேயிந்திரைபோ
தேவேந்திரன்மணியே செம்பொன்னேதானுறங்காய்
இந்திரனார்செல்வங்கள் ஈடேறவந்தேனோ
வானுலகம்ஆள வந்துபிறந்தானோ
மைந்தராய்வந்து மகவாசைதீர்த்தானோ
எங்கள்துயர்தீர இன்றுவந்தபாலகனோ
தோகக்கணக்குஞ் சிறந்தபெருங்கணக்கும்
மண்ணிற்கணக்கு மகாதேவர்தன்கணக்கும்
விண்ணிற்கணக்கும் விரைத்தெழுதவந்தவனோ
சந்திரசூரியர்போற் சார்ந்ததிருமகனோ
ஆதிபரன்கட்டளையில் அவதரித்தபாலகனோ
துட்டர்கணக்குந் துரோகியர்கள்தன்கணக்கு
இட்டாகணக்குந் தெரிந்தெழுதவந்தவனோ
தேவேந்திரன்தவத்தாற் சிறியவுயிர்செய்யும்
நன்மைகளுந்தீமைகளு நன்றியவந்தானோ
சீராய்ச்சிவலோகஞ் சேருகின்றபுண்ணியரை
ஆராய்ந்துசொல்ல அறிவுடனேவந்தானோ

ஆவின்வயிற்றில் அவதரித்தபாலகனே
எங்கள்அரும்பொருளோ யிந்திரனார்கண்மணியோ
எங்கள்குலம்வாழ எழுந்தருளும்நாயகமோ
இந்தப்படியாக யேற்றுநின்று தாலாட்டி
அந்தமகனை யரிதாய்வளர்க்குங்கால்
தாதிமார்தன்பாலைத் தானுண்கச்சொன்னார்கள்
உங்கள்முலைப்பாலை யுண்கவோநான்பிறந்தேனென
என்றறிந்துசொன்ன விளமைக்குழந்தைக்கு
மந்திரநூல்வேத மகாடீகையுண்டாக்க
வாத்தியார்தம்மை வரவழைத்தாரந்நேரம்

விருத்தம்.

இந்திரன்புதல்வருக்கு அன்பமாயோதிவைத்த
தந்திரவாத்திமார்கள்தான அரிவோமென்றோத
மந்திரப்புதல்வனாரும் வகைசொல்லுமென்றுகேட்க
மந்திரமுரைசொல்லாமல் மைந்தனும்உரைசெய்தானே,

வசனம்,

அதேதெப்படியென்றால் இந்திரன் இந்திராணி இவர்கள்நாளொருமேனியும்பொழுதொரு வண்ணமுமாகவளர்த்த சித்திரபுத்திரனானவனுக்குவேதங்கள் அப்பியாசம்பண்ணுவிக்க வேணுமென்றுவாத்தியாரையழைப்பித்துப் பட்டணமெல்லாம அலங்காரஞ்செய்துமகாதானங்கோதானமவஸ்திரதான முதலானதானங்கள்செய்துவோமமெக்கியங்களெல்லாஞ்செய்து சித்திரபுத்திரற்குவாத்தியார் அரிவோமென்றுசொல்ல அதற்குப்பயன்சொல்லுமென்றுவாத்தியாயரிடத்திற்கேட்க அவர்சொல்லயேதுமில்லாமல் சித்திரபுத்திரர் தானேபயன்சொலிப் பின்னடக்கிறகாரியங்களைச் சொல்லுகிறோம்,

நடை,

விநாயகர்பூசை விதவிதமாய்த்தான்முடித்து
ஆதிமுதலான அரிவியுங்கைகொடுத்து
அரிபோபரியோமென றாதரவாய்ச்சொன்னார்கள்
ஆயிரம்பார்ப்பார் அரியோகமெனவே
அரியென்றசொல்லுக்கு அருத்தங்களுரையுமென
அப்போதுவாத்தியா அதன்பொருள்சொல்லாதிருக்க
நான்சொன்னபடிகேளு நலலதொருடத்தமரே
அரிக்கும்பொருள்சொன்னால் அண்ணாவீரெனக்கு
குருக்களுமாவீர் குற்றமில்லைகண்டீரே
எனக்குமோர்அண்ணாவி யீசனல்லால்வேறுமுண்டோ
மேலானவுங்களுக்கு வேதமதுசொல்லுவன்யான்
கிட்டியானவாசிக்க கேளுங்களென்றுசொல்லி
நன்னெறிநூலவிழ்த்து நறபடமீதெழி
சைவநூலவேதந் தழைக்கவேவாசித்தார்
வோரேட்டைக்குள்ளே யுலகமெலாமவாழவென்று

தேவர்கள்வாழவென்று திருவேடுவாசித்தார
மூவர்கள்வாழவென்று முதலேடுவாசித்தார்
அயனரயால்செங்கை யானதொருசீவனமும்
கமனூநூலேலங்கன் நடுக்கணத்திலுள்ளவர்காண்
சங்கரநாராயணர் தானகொடுத்தபட்டோலை
அட்டவணைபட்டோலை யனுபபடியேவாசிக்க
வாதியார்தனைகணக்கு வந்துவெளிப்பட்டதுகாண்
தனதுமனையன்றி தலைநாளில்நீருமோரு
அதிகமனையை யடிமையொததிக்கண்டீரே
உமமுடையசெய்கையும் உமக்கறியப்போகாமல்
என்னுடையயேட்டி லெழுதினேசொன்னார்
என்றுசொல்லிவாத்திமாரிருகையாற்போற்றிசெய்து
ஈஸ்வரனாகற்பனையா மென்றுசொல்லித்தானிருக்க
இவ்வாதைகள்கேட்டு இந்திரனிந்ராணியுடன்
மைந்தனையங்கே மனமகிழ்ந்துமுத்தமிட்டார்
இப்படியேதானும் இருகதஞ்சிலநாளில்
மைந்தர்பெருமாள மனமகிழ்ந்தேதுசொல்வார்
பூலோகசோதனைக்கு போய்வாறேனென்றுரைத்தார்
நரகங்களசோதனைக்கு நாம்போறோமிந்திரரே
அங்கேசிவன்வாச வருகிருக்கநாயம்போறோய
என்றுகணக்கை யிதமுடனேதானசுருட்டி
நன்றியுடனே புறப்பட்டார்நற்கணக்கர்
இட்டபடியே மீஸ்வரனார்தானகொடுத்தார்
கட்டளையிட்டபடி கணக்கெழுதப்போறோமென்றார்
அந்தக்கயிலை யரனார்சருவேலம
நிதகமெழுதிவர நியலாருள்கொடுத்தார்
பத்திரமாயென்வசநிற் றநதகொருபட்டோலை
சிநடனேயெனவசத்திற் சிறப்பாகவிருக்குதுகாண
பரமனார்தான்கொடுதத பண்டாரபொககிஷமும்
கொததவரிசைகளை கொற்றவரேகண்டீரோ
பொனனுலகமட்டியலலா புண்ணியரேநீராண்டீர்
நிறைநதபுகழ்மாத வுநீருமிகத்தவிருக்க
உங்களுக்குப்பிள்ளைவா யுகந்தளித்தாகண்டீரோ
அண்டாண்டகோளமட்டும் அனுவளவுந்தப்பாமல்
எழுத்தாணிபட்டோலை யென்னைகயிற்றான்கொடுத்தார்
முகநிறைமோதிரமும முன்கிரலிலேயணிந்தார்
கண்டீரோநீருங் கனையாழிமோதிரத்தை
இவ்வளவுவாழ்வுமுங்க ளிருவருடவாழ்வும்
புதிரனகாரியத்தைப் போய்பார்க்கவேணுமென்று
போய்வருவேனையா பொருந்திவிடைதாருமென
வாடவயக வருபவளீரிருந்தால்
பாலனும்வந்த பலங்கிடைக்குமென்றுசொல்ல

இங்கிருக்கநீதி யெள்ளளவுமில்லையென்றார்
தான்கயிலைசென்று அவ்விடத்தில்நானிருப்பேன்
அங்குமங்குமாக இருப்பேனெனவுரைத்து
அவர்கள்விடைவாங்கி யடிபணிந்திங்குவந்தேன்
என்று) சித்திரபுத்திரனார் இரக்கமாய்ச்சொன்னவுடன்
பசுவைமிகவழைத்துப் பாலன்வந்தான்கண்டாயே
என்றானார்சொல்ல வற்றதொருநற்பசுவும்
சென்றுமகனார் திருமுகத்தைத்தான்மோந்து
எழுந்துமிருசெம்பால் இடங்கிகடவினதே
இப்படியேதானும் இருக்கின்றவேளையிலே
இந்திரனிந்திராணி இவர்களிருபேரும்
மகனார்தான்போன வழித்தடத்தைநோக்கி
வந்தார்கயிலை மலைதனிலேவானவர்கோன
யப்பால்நடக்குமதிசயத்தைக்கேளுமினி
சிவனாரிடத்தில் தேவேந்திரன்புயமைப்
புத்திரனுஞ்சத்துருவாய்ப் போனானெனவுரைத்தார்
உரைத்தமொழிகேட்டு உமைபாகரேதுரைத்தார்
சத்துருவென்று சலியாமல்சொன்னாயே
தாயாருமே தன்பிள்ளைவந்ததென்றால்
பேயாஉனக்கினிதான் பேசககணக்குமுண்டோ
பித்தனைப்போல பிதற்றுகிறாய் நீதானும
எட்டுகணக்கும் கடனாபெருங்கணக்கும
நன்மையுந்தின்மையும எடுவெழுதவேணுமென்று
எமதருமர்தன்னிடத்தி லிருந்துகணக்கெழுத
வேணுமென்றுசொல்லி விருமப்போயழைத்தோம்
நாங்கிருந்தாலென்ன வற்றதொருஇந்திரனே
போமபிள்ளையென்றுரைக்கப் போனாரேஇந்திரரும்
ஈஸ்வரனார்தாமும் பெற்றதொருபுத்திரனை
இப்போதுநீயும இயமனுடவாசலுக்குச்
சித்திரங்கள் செய்யுமுறைப்படியே
அத்தாந்திரக்கணக்கும அடைவாயெழுதுமென்றார்
இப்படியேதானும் இயமனைதானழைத்து
கலியனுபத்திரக்காற் களதிகள்தானமிருக்க
அவையக்குறனுண்டாகு மானதாவிப்போது
எல்லாக்கணக்கு மியலபாககாணெழுத
சித்திரபுத்திரரைச் சிறப்பாயருளினன்காண்.
என்றுநமனுக்குச் சிவனாரிசைத்தபின்பு
நன்றுநன்றென்று நமஸ்கரித்து அந்நேரம்
இருபேருமொன்றாகி யேறவிடைதான்வாங்கி
நிறைபொழுதேபிரமா நிமலர்அருளாலே
இருபேருமவாழவென்று வற்றவிடைகொடுத்து
சுட்டகருதடனே கணத்தாண்டஞ்சூலமுடன்

குத்திடுங்கோல்கொடுத்துக் கோலக்கடாவளித்து
இவ்வளவுந்தான்கொடுத்து ஏற்றபிரமாவும்
மாராய்சிவனுக்கு வழியடிமைசெய்வார்மேல்
சிவனைநினைத்துத் திருத்தொண்டுசெய்வார்மேல்
தவத்தைநினைத்துத் தான்பூசைசெய்வார்மேல்
தருமங்கள்செய்வார்மேல் சற்றுமேசொல்லாமல்
பத்திகளுஞ்சொல்லி போகவிடைகொடுக்க
கருங்கடாமேலேறிதான் கள்ளனைத்தானுமழைத்து
வலக்கடாவேறி வாறார்எமதருமர்
சித்திரபுத்திரநுஞ் சீராகத்தேரேறி
நல்லமுரசின்னம் நன்றாய்முழங்கிவர
இருபேருமொன்றாகி யிந்திரலோகம்புகுந்தார்
இருபேருந்தாங்கள் இசையவேதான்பேசி
பாரிலுள்ளோர்தங்கணக்கைப் பார்த்தார்களப்போ
சிவகுருவேயென்று திருநீறணியாதார்
நாராயணாவென்று நாமமணியாதார்
பெற்றதாய்தந்தையைப் பேணாதபாவியர்கள்
மண்ணிலிருந்து வழக்கோரஞ்செய்தவர்கள்
அம்பலத்தில்நின்று அநியாயஞ்சொன்னவர்கள்
ஊரார்உடைமைக்குப் பேராசைகொண்டவர்கள்
சல்லாபகசடர் சனைக்குசப்படியாதோர்
சிவனைவணங்காதார் திருக்கோயில்சூழ்ந்தார்
அபனைவணங்காதார் ஆலயத்தைமேவாதார்
பூசைக்குவந்தவரைப் பிணைமாறவென்பார்கள்
கன்றுவருந்தக் கறந்துபாலுண்டவர்கள்
சுற்றங்கொதிக்கச் சுறந்துபாலுண்டவர்கள்
பொட்டநாழிமறக்கால போட்டளந்தபாவியர்கள்
பிள்ளையழித்துப் பேசமுரச்சொன்னவர்கள்
உள்ளபொருளை இல்லையென்றேயுரைத்தவர்கள்
தூரவழிக்குத் துணைவாரோமென்றுசொல்லி
ஆருமில்லாக்காட்டில் அடித்துப்பறித்தவர்கள்
குளிர்சீலையன்றிக் குளித்திடும்பொல்லாதார்
கொண்டவனையாள்வருந்த கூத்தியார்கள்தன்னைவைத்தே
மாதாபிதாவருந்த வயிறுவளர்த்திடுவர்
இடுண்டுமொழுதார் ஏற்றவர்க்குமில்லையென்பார்
தீட்டும்பிழைக்கையில் நின்றுமெள்ளக்கேட்டவர்கள்
சாவற்போர்செய்யுஞ் சண்டாளபாதகர்கள்
கொண்டகணவனுக்கு குறிப்பறிந்துசெய்யாதார்
இப்படியாக்கொற்ற விழிதொழில்செய்வோரையெல்லாம்
செப்பமுடன்நல்ல செகதழலிற்றான்போட்டு
பாசத்தைவீசி பகரவேவாள்பிடித்து
நாசிதனிற்கஞ்சரியிட்டு நாக்கில்துறட்டிவிட்டு

வெள்ளாளரெல்லாம் வேண்டியதெல்லாப்படைத்தும்
நெல்லுகளைநாங்கள் உலர்த்தாமல்விட்டிடுவோம்
கள்ளமரக்கால்நாழி கலந்துமிகவிற்றிடுவோம்
என்றுசொல்லியெங்கள் குற்றம்பொறுமெனவே
இவர்களுக்குத்தக்க ஏற்றபடிதானெழுதி
பட்டமார்வீதியிலே வந்தார்பரிவுடனே
பட்டமார்வந்து பணிந்துமிகத்தொழுது
குளிக்காமல்சேவிப்போம் கோவிலையும்பூசிப்போம்
பால்தயிரும்நெய்யும் பசித்தெடுத்துசாப்பிடுவோம்
ஏறுதமானதனை யேற்றிடுவோமென்றுசொல்ல
இவர்களுக்குமங்கே ஏற்றபடிதானெழுதி
அந்தந்தச்சாதிதெரு அடைவாகத்தான்பார்த்து
அவரவர்கள்செய்யும்வகை யதிர்க்கவேதானெழுதி
பாவபுண்ணியங்கள் பகுந்துமேதானெழுதி
புண்ணியஞ்செய்வோர்க்கு புதுமைகள்செய்யுமென்றார்
புண்ணியஞ்செய்வோரைப் புதுமையாயெடுத்தெழுதி
பசியாமலன்னம் பாக்குடனேகொடுத்தவரை
இரக்கத்துடனே ஏமாறிவந்தவற்கு
உடுக்கப்புடவை யுகந்தளித்தோர்தங்களையும்
பிச்சையுமிட்டுப் பெரியவிடங்கொடுத்து
மகேசுரபூசைக்கு மடங்கட்டிவைத்தவரை
சாலைமரமுரு சத்திரமும்வைத்தவரை
சிவபூசைதவபூசை குருபூசைசெய்வோரை
நான்குதிசைவிளங்க நந்தவனம்வைத்தவரை
ஆலயங்கள்கட்டி யன்னமிகக்கொடுப்போரை
இடிக்கபழங்கோயி லெடுத்துப்புதுப்பித்தவரை
தாகத்துக்காகநல்ல தண்ணீர்கொடுத்தவரை
பொரிந்தவயிர்தனக்கும் போகநீர்விட்டவரை
இராக்காலப்பட்டினிறை யிதமாகத்தீர்த்தவரை
அந்தணர்க்குஅக்கிராரம் அடுக்கடுக்காய்ச்செய்தவரை
பஞ்சம்வருங்காலம் பகுத்தன்னமிட்டவரை
பெரியோர்கள்தங்களையும் பேணிநடந்தவரை
விருந்துகள்வந்தால் வேறுவைத்துண்ணாமல்
வைத்துவகையில் வஞ்சகங்கள்செய்யாரை
நெய்விளக்குமாவிளக்கு நேமமாய்ச்செய்தவரை
மாதானங்கோதானம் வஸ்திரதானமுதலாம்

தானங்களெல்லாம் தயவாகச்செய்தவரை
வழக்கோரஞ்சொல்லாமல் மன்னருடன்சேர்ந்தவரை
சிவனைவணங்கிச் சிவபூசைசெய்தவரை
செருப்புக்குடைமுதலாய்ச் சிறந்தபிராமணர்க்குக்
கோடைகாலத்தில் கொடுத்தனைமிட்டவரை
பிள்ளைபால்வார்த்தோரைப் பிணிக்குமருந்தளித்தோரை
அதிதிபரதேசியருக் கன்னமிட்டுவுண்டவரை
சூரியனைப்பொன்னாளுந் தோத்திரங்கள்செய்வோரை
புருஷனையல்லால்விரதம் பதிவிரதையாயிருந்தோரை
பத்தாவின்மேலாசை பண்பாகவைத்தவரை
குருவையுமறவாரைக் கொலைகளவுசெய்யாரை
கணவனிடசொல்லைக் கட்டாய்நடத்தினதை
ஆறுகுளங்களதனி லணைகட்டிவைத்தவரை
வழிப்பறியாமல் வாகாக்காத்தோரை
கன்றுக்குப்பால்குடிக்குமட்டுங் கருத்தாகவிட்டவரை
தருமங்களசெய்வோரைத் தப்பாமலெழுதிவைத்தேன்
ஒளிவுமறைந்தவர்க்கு ஊன்றுகோல்தான்கொடுப்போர்
காய்ந்ததலைக்கெண்ணெய தட்டாகத்தானளிப்போர்
ஆவைவணங்கி யனுதினமுந்தான்தொழுவோர்
விநாயகர்பூசை விருப்பமாய்ச்செய்தவர்கள்
பள்ளிகூடங்கட்டிப் பாங்காகவாத்தியார்க்குச்
சம்பளமுமுடைப்பணமும் தான்கொடுத்தோர்தங்களையும்
மந்தையெனனாளுங் கருதித்தொழுதிடுவோர்
காதாபிதாவை மகிழ்ந்துநித்தந்தொழுவோர்
வேதங்களாகமங்கள் விதிப்படியேதானடப்போர்
குருநன்றிசெய்நன்றி குறையாமற்றானடப்போர்
விஷ்ணுக்கள்தனைமீள விருப்பமாய்ச்செய்தவரும்
வண்ணான்நாவிதன்கூலி மகிழ்ந்தேதான்கொடுத்தோர்
தருமங்கள்செய்வோரைத் தப்பாமற்றானெழுதி
இப்படிக்கொத்த இயல்புடையபுண்ணியரைச்
செப்பமுடனழைத்து செத்தபிழைபொறுத்து
தப்பாயமீசுரனார் தன்னடியிற்றானசேர்ந்து
வைகுண்டலோகத்தும் வகையுடனேதான்சேர்த்து
அந்தவுலகத்தி லமரர்களோப்போலிருக்க
புண்ணியஞ்செய்தவர்கள் போதமேதாவிருக்கக்
கயிலைக்குவடபுரத்திற் கனவனமுண்டாக்கி

பூங்காவனத்திற் புட்பங்களுண்டாக்கி
காய்கனிகளுள்ளதெல்லாங் கனக்கவேயுண்டாக்கி
எப்போதுஞ்சிவனை இன்பமாய்ப்பூசைசெய்ய
பணிவிடைகள்செய்யவே பாங்காகவுண்டுபண்ணி
அவ்விடத்திலேயிருக்க அன்பாகசெய்வித்து
வைகுண்டலோகத்தும் வாழ்ந்திருக்கதானெழுதி
பாவியர்க்குத்துன்பப் பலனையெழுதுகிறார்
அட்டைக்குழியும் அழுகுபுழுக்குழியும்
கிருமிவகைக்குழிகள் வேறாகச்செய்தார்காண்
அகில்கிடங்குவெட்டி யதிலேயனல்வளர்த்தி
முள்ளுவனங்களையு மோசமாய்ச்செய்தார்காண்
நாற்பாலம்மயிரபாலம் நூதனமாய்ச்செய்தார்காண்
காடுங்கறடுங் கல்லுமிகவுண்டாகி
சற்றுநிழலில்லாமல் தவிக்கவேசெய்தார்காண்
நரகக்குழியும் நடுநடுங்கச்செய்துவைத்தார்
மெத்தவேயுண்டாக்கி விமரிசையாய்ஆயுதமும்
ஆயிரங்கிங்கிலியர் அசைக்கவொண்ணாச்செக்குகளும்
இரும்புத்தூணுக்காய்ச்சி யேற்றபடிநிறுத்தி
செப்புத்தூணுக்காய்ச்சி சேரவேதானிருத்தி
இரும்புமுக்காலிகளை எந்நேரங்காய்ச்சிவைத்தார்
செவிகளுக்குநாராசஞ் சேரவேயுண்டாக்கி
உச்சிமுதலா யுள்ளங்கால்தன்வரைக்கும்
வகைவகையாயாணி வரிசையாய்த்தானடித்து
தொறண்டிவகைகள் தோற்றமிகவுண்டாக்கி
இந்தவகைப்படியே எள்ளவுந்தப்பாமல்
பாவபுண்ணியங்களுக்குப் பருந்துவகைசெய்தபின்பு
இந்திரணிந்திராணி யிவர்கள்பாற்போகலுற்றார்
அப்பாலநடக்கு மதிசயங்களுள்ளதெல்லாம்
செப்பமுடனேநானுஞ் சொல்லுகிறேன்கேளுமென்றார்
மாதாவின்றன்னருகே வந்தார்பெருங்கணக்கர்
எமதருமராசனு மியல்பாகஅங்கிருந்தார்
தந்தையாரைவணங்கித் தாயார்தம்பாதமதில்
நமஸ்கரித்ததன்மகனை நன்றாகவேவாழ்வாய்
என்றுசொல்லியுத்தமரை இருகையாற்றானெடுத்து
கன்னல்மொழியாள் கனிவாயில்முத்தமிட்டாள்
முத்தமிட்டபோது முன்னின்றதாதியர்கள்
எண்ணெய்ப்பலகைதனை யெடுத்தங்கேதான்போட்டு
பொற்கிண்ணிதன்னிற் போதவேயெண்ணையிட்டு
எண்ணெய்காப்புச்செய்ய எழுந்தருளவேணுமென்றார்

எண்ணைக்காப்பிட்டபின்பு ஏற்றதலைதான்கோதி
தீர்த்தமுமாடித் திருநீறுந்தானணிந்து
சிவனைத்தொழுது சிவபூசைதான்முடித்து
வேதப்பிராமணர்க்கு வேண்டியதானங்கொடுத்து
அதிதிபரதேசியர்க்கு அன்னமிகக்கொடுத்து
மகேசுரபூசையை வண்மையுடன்செய்தபின்பு
ஆபரணமுள்ளதெல்லாம் அழகழகாய்த்தான்பூண்டு
புட்பாதிகளெல்லாம் போதவேதான்முடித்து
போசனச்சாலைக்குப் போயிருந்தாருத்தமனார்
நாடாளும்இந்திரரும் நாகமடைந்தையரும்
தலைவாழையிலையறுத்து தங்கத்தகடழுத்தி
பூமிதனில்வைத்து பொன்னின்முக்காலிவைத்து
மாணிக்கவட்டிலை வைத்தார்கள்முன்பாக
கைக்குநீர்வார்த்துக் கறிவகைகளுள்ளதெல்லாம்
சுற்றுக்கறிகளெல்லாம் சேரவேதான்படைத்து
தும்பைப்பூப்போலமுது சொரிந்துநறுநெய்வார்த்து
தம்பியரையுண்ணென்று தடவினார்முதுகதனை
அப்போதுஉத்தமனார் அவர்கள்முகநோக்கி
உன்வீட்டிலேயமுது உண்பமேயாமாகில்
உன்வயிற்றில்வந்து பிறப்பேன்காண்மாதாவே
யென்றபொழுதில் இயல்பானமாதாவும்
நின்றுபரதவித்து நெடுமூச்சுத்தானெறிந்து
அகமகிழச்சந்ததிதான் அறியாதபாவியென்று
காதல்மிகவில்லாத கன்னியிருந்ததென்னவென்று
போதமயங்கியே போய்சேர்ந்தாள்பஞ்சணையில்
மாதாமயங்கியபின் மைந்தரெழுந்திருந்து
தண்ணவேதாருமென உவந்துநிற்கஅப்போது
உண்ணீர்குடித்தவுடன் தாகந்தெளிந்தாற்போல்
கைதொழுதுபாலகனைக் கட்டியெடுத்தணைத்து
கைவிழியாள்தானும் மடியிலெடுத்துவைத்து
வருக்கைப்பலாச்சுளையு மற்றுமுள்ளநற்கனியும்
சர்க்கரைநற்சீனி தாரணியிலுள்ளதெல்லாம்
திரட்டுப்பால்தன்னையுஞ் சிறக்கவேதான்படைக்கப்
பாங்குடனேயுத்தமனார் பரிந்தமுதுசெய்யலுற்றார்
கைகழுவிச்சுத்திபண்ணிக்கனகமணியாசனத்தில்
அடைக்காயும்வெள்ளிலையும் ஆனபரிமளங்கள்
சிறப்பாகத்தான்கொடுத்துச் சிரதைமகிழ்ந்தங்குரைப்பா
இயமலோகக்கணக்கு எழுதவேபோவாய்நீ
அற்பமாங்குற்றங்கள் அக்கணக்கில்எழுதாமல்
சொற்பமாங்குற்றமதைத் தொகைபடுத்தாமற்கணக்கை

எழுதிமுடித்திடுவாய் என்மகனேயென்றுசொல்ல
ஏதுகுற்றஞ்சொன்னீர் என்னுடையமாதாவே
தலைவாழையிலையறுத்துத் தானெனக்குப்போட்டதுவும்
குற்றமென்றுபட்டோலை கொண்டேனென்மாதாவே
யென்றுசொல்லிப்பேசி யிருக்கின்றஅன்னேரம்
யெமதர்மராச னியல்பாகத்தானழைக்க
அந்தமொழிகேட்டு அந்நேரம்பலகாரம்
மைந்தர்பெருமாள் மாளிகையிலுட்புகுந்து
போகவிடைதாருமென்று பொருந்தவேதாமுரைத்தார்
வந்துதொழுத மகனுரைத்தான்பார்த்து
வாரியெடுத்து மார்போடேதானணைத்து
இந்திரனுடனே யிந்திராணிமனமகிழ்ந்து
தருமராசனிடத்திற் ருமொருவார்த்தைசொல்வார்
புத்திரர்பின்வருவார் போமுன்பெனவுரைத்தார்
அந்தப்படிதரும ராசனும்போகலுற்றான்
போனார்யமதருமர் பூவுலகிற்சேனையுடன்
அப்பால்நடக்குகிற அதிசயத்தைக்கேளுங்கள்
மிருகண்டன்நற்கதையை மெய்யாகச்சொல்லுகிறேன்
வருந்திமிருகண்டன் மகனுமேவேணுமென்று
பாதாளந்தோன்றவெட்டிப் பதிவாய்நல்வளர்த்த
வோமகுண்டமத்தியிலே யுயர்ந்தகம்பம்நாட்டியந்தக்
கம்பத்திலேறி கால்விரலைத்தானூன்றி
வேதங்கள்அக்கினியு மேலேபடர்ந்தெரிய
ஈசனேபிள்ளையரு ளென்றேதவமிருந்தார்
தண்ணீரருந்தாமற் சருகுப்பொசியாமல்
இருந்தான்தவசு ஈராண்டோடெட்டுடனே
வருந்தித்தபசிருந்தான் மன்னிமிருகண்டன்
அந்தத்தவத்தருமை யரனுருந்தாமறிந்து
தவசிவடிவாகத் தானெழுந்தார்சங்கரரும்
அப்போதுஉமையவளு மப்படியேதானும்வந்தாள்
இருபேருந்தவசியா யேகினார்தவத்தருகே
மிருகண்டன்செய்தவத்தை மெய்யாகக்கண்டார்காண்
அப்போமிருகண்டன் அரனுரைத்தான்தொழுது

விருத்தம்.

அயயனேபோற்றிபோற்றி யறம்வளர்த்தவனேபோற்றி
செய்யனேபோற்றிபோற்றி திருக்கயிலாசாபோற்றி
பையவேதவசியாகப் பார்தனிலுதித்தாய்போற்றி
யுய்யவேயடியேற்கன்பா யொருமைந்தனருள்வாய்போற்றி.
நடை என்றுமொழிகேட்டு இருவருமனமகிழ்ந்து
சிந்தையுடனே திருவாக்குத்தானுரைப்பார்.

வாராய்மிருகண்டா மதலையைநாந்தருவோம்
சீராகவேவயசு திர்க்காயுசாயிருந்தால்
கல்வியறிவில்லாமற் கசடனாய்த்தானிருப்பான்
அல்லதுகல்வி யறிவுடையனாயிருந்தால்
பதினாறுவயததனிற் பரிந்தேயிறந்திடுவான்
ஆனதினாலந்த வகைதனிலேயாண்பிள்ளை
எந்தவகையா யிருக்கவேணுமென்றார்
அப்போமிருகண்டன் ஆராயுங்கல்வியனாய்த்
தவத்தினில்மிக்கோனாய்த் தந்தருள்வாய்பிள்ளையென்று
தெண்டனிட்டபோது திருமதலைதானருளி
அம்மையுமையவளும் ஆனபரமேஸ்வரரும்
இடபமதிலேறி யேகினார்கயிலைதனில்
மிருகண்டனாரு மிக்கத்தவமுடிந்து
நலம்பெறவேதானிருந்து நன்றாகவாழ்கையிலே
வந்துபிறந்தான் மகவாகமார்க்கண்டன்
சாஸ்திரபுராணமெல்லாம் சதுராகத்தான்படித்து
வேதங்களோதி விளங்கினார்மார்க்கண்டன்
அப்பால்நடக்கு மதிசயத்தைகேளுமினி
வில்வந்துளசி விருப்பமுடன்தானெடுத்து
மந்தாரைப்பிச்சி மருவற்றபூக்களுடன்
செண்பகமுமல்லிகையுஞ் சேர்ந்தஅலரியுடன்
புஷ்பவகைகளெல்லாம் போதவேதானெடுத்து
தீர்த்தங்களாடித் திருநீறுந்தானணிந்து
கண்டியணிந்தைந்தெழுத்தைக் கருத்திலேதானமைத்து
சிவனைத்தொழுது சிவபூசைசெய்யலுற்றான்
அல்லும்பகலும் அரைநாழிகைபிரியாமல்
அந்தமுடன்சிவனை யன்பாகப்பூசைசெய்தான்
தோத்திரங்கள்தானும் துலங்கவேசொல்லலுற்றான்

விருத்தம்.

அண்டர்கட்கரியாய்போற்றி யடியவர்கெளியாய்போற்றி
வண்டமிழ்ப்பாண்டிநாடுவாழ மண்சுமந்தாய்போற்றி
கண்டவர்க்கினியமேனி காட்டியென்சென்னிமீதில்
முண்டகத்திருத்தாள்வைத்த முத்தனேபோற்றிபோற்றி.
வேதநாயகனேபோற்றி விண்ணவர்தலைவாபோற்றி
மாதொருபாகாபோற்றி மறுசமயங்கள்மாயப்
பேதகஞ்செய்வாய்போற்றி பிஞ்ஞகாபோற்றியான்செய்
பாதகமனைத்துந்தீர்க்கும் பராபராபோற்றிபோற்றி.

நடை இப்படித்தோத்திரங்கள் இயம்பிமிகப்பணிந்து
பழுதுகள்வாராமல் பரமனையேதொழுவார்
இந்தப்படியே யிருக்குந்தறுவாயில்

ஆண்டுபதினாறும் யாச்சுதேயாங்கவர்க்கு
அப்போதுயமதன்மர் அருகில்நின்றதூதுவரை
மார்க்கண்டமாமுனிக்கு வயசுபதினாறாச்சு
மார்க்கண்டன்றன்னை வரவழையுமென்றுரைக்க
அந்தமொழிகேட்டு ஆனபெருந்தூதுவர்கள்
சென்றவனைத்தேடிச் சீக்கிரததில்வந்தார்கள்
அப்போதுமார்க்கண்டன் ஆனபெருங்கோயில்நிற்க
நின்றமார்க்கண்டனையு நீர்வாருமென்றுரைத்தார்
அப்போதுதூதரைத்தான் அன்பாகத்தான்பார்த்து
நீங்களும்யாரென்று யெடுத்துரைக்கரந்நேரம்
இயமதருமராசன் இயல்தூதர்நாங்களெல்லாம்
எங்களரசனும்மை யினிமையாய்த்தானழைத்தான்
எங்கள்வயசு மொருபதினாறாச்சுதென்று
வந்தோமுமையழைக்க வாருமென்றுதானுரைக்க
மார்க்கண்டனுரு மனம்நடுங்காதேயுமைபாகா
தார்கொன்றைசூடுகின்ற சங்கரனைத்தானினைந்து
வந்ததொருதூதுவரே வார்த்தையொன்றுகேளுங்கள்
அந்தமுடனுங்களை யழைத்துவரச்சொன்னவனும்
முந்தியிருந்தவனோ முறைசெய்யவந்தவனோ
எந்தயியமனெனையழைக்கச்சொன்னவன்காண்
என்றபொழுதில் மெய்தூதரேங்கிநின்றே
இவருயிரைத்தான்பிடிக்க இசையாதென்றோடிவந்து
எமதருமராசன்பால் விசைக்கிறார்தூதுவர்கள்
மார்க்கண்டன்றன்னை வரவழைக்கச்சொன்னீரே
அவன்சொன்னவார்த்தை யடியேனுரைக்கிறோம்
முந்தியிருந்தவனோ முறைசெய்யவந்தவனோ
உங்களியமன் றனித்தேடிப்போவான்காண்
வந்தபடியே வழிபார்த்துஓடுமென்றார்
உடனேபயந்து ஓடிவந்தோமென்றனரே
அந்தமொழிகேட்டு அப்போதுயமதன்மர்
கோபித்துகண்சிவந்து கூறவருமந்நேரம்

விருத்தம்.

அரியுமயனுந்தெரியாத அரனைநோக்கித்தவம்பண்ணிப்
பிரியமுடனேமிருகண்டன் பெற்றபிள்ளையுயிர்சோர
எரியுங்குஞ்சியுளகூற்ற னெடுத்தான்சூலத்துடன்பாசம்
விரியுங்கடல்சூழுலகமெல்லாம் வெற்றிபிறக்கத்தோன்றினனே.
தெரியுங்கடற்போற்கோபமுண்ட சேனையெல்லாம்புடைசூழக்
கரியுமலைபோல்செம்மலைபோல் கடுகநடந்தான்வழியின்மேற்

பெரியசட்டாவின்மீதேறிப் பிறைபோல்வளர்ந்தவயிறுகளும்
எரியும்விளக்கின்சுடர்போல இரண்டுவிழியும்பொறிசிதற

அகோதெப்படியென்றால் மார்க்கண்டனுக்குவயசுபதினாறான வுடனே தூதர்களையனுப்பிக் கூட்டிவரச் சொல்ல மார்க்கண்டனவன் சுவாமி கயிலையங்கிரிவாசர் கிருபையைத் தியானித்துக் கொண்டுவந்த தூதரை நிராகரித்து எமதன்மராசனையுஞ் சட்டைபண்ணமற்சொன்னசெய்தியைத் தூதரானவர் தருமராசாவினிடத்திற்போயறிவிக்கத் தருமராசன் மிகுந்தகோபங்கொண்டு கண்களிரண்டுநெருப்புப்பொறி பறக்கத்தக்கதாக அண்டங்கள் மலைகளெல்லா நடுநடுங்கத்தக்கத் தேவர்களெல்லாம் வெருண்டோடத்தக்கதாக வயிரமுடிதரித்தும் புசங்களிரண்டிலும்ஆயிரங்கால்கள் தூக்கப்படாநின்றஉடைவாளும் சுரிகையுங்கட்டி ஆயுதவரிசைகளிற் சிலஆயுதமும் இடுப்புகளில் வரைந்துகட்டிப் பாசக்கயிறுந்தண்டாயுதமெடுத்து கருங்கடாவின்பேரிலேறிக்கொண்டு வெற்றிச்சங்கூதி வீர முரசறைந்து இருபுறமுஞ் சேனைதளங்கள் சூழ்ந்துவர ஆயிரங்காலாள்கள் ஆயுதபாணிகளுடனேவரவும் ஒவொருகொம்பு இரண்டுநாழிகைப்பரப்பு நீளம்வளர்ந்துயிருக்கப்படாநின்ற கருங்கடாவானது இரண்டாயிரம்வரவும் மீசைகள் படபடவென் று துடிக்கத்தக்கதாகவும் அண்டபுவனங்களெல்லாம் அதிரத்தக்கதாகவும் வலதுதுடைதட்டி மார்க்கண்டனைத் தேடப் புறப்பட்டான்.

நடை.

வாரார்எமதன்மர் மார்க்கண்டர்தனைத்தேடி
இயமதன்மன்அங்குவரும் இரைச்சல்மிகக்கேட்டு
மார்க்கண்டன்தானு மனதுமிகநடுங்கி
என்செய்வோமென்று ஈஸ்வரரைத்தானினைத்து
தஞ்சமென்றுசொல்லிச் சரணம்பணியலுற்றான்

விருத்தம்.

கண்டான்பாலன்காலனையுங் கண்ணீர்மிகத்ததும்பி
அண்டர்பெருமான்றனைப்பார்த்தே யடியேன்செய்தகுற்றங்க
ளுண்டானாலும்பொருத்தருள்வா யுற்றகாலனென்னுயிரைக்
கொண்டேயின்றுபோகாமற் கோவேகாத்துக்கொள்வாயே.
என்றேயிரங்கிமார்க்கண்டன் இறையவன்பாதமலர்போற்றி
நின்றேதொழுதுகும்பிட்டு நெடுமூச்செறிந்துநின்றவனும்
நன்றேயுனதுபத்தியினி நமனுமுனைப்பற்றிடில்யானுஞ்
சென்றேதொலைப்போம்மார்க்கண்டா தெரிவாயென்றேசொல்லு
அஞ்சாதுனைநாங்காத்திடுவோ மானைமுகன்தன்னுணை
துஞ்சாதேநீயவனுடனே சொல்லாலொன்றும்பேசாதே
மஞ்சார்பொழில்சூழுலகறிய மதியாதுன்மேல்வருவானேன்
நஞ்சார்கூர்வாள்மழுவாமலே நமனைக்கொல்வோமெனச்சொல்ல.

கோலஞ்செய்துமலர்தூவிக் குறித்துன்பாதம்வணங்கிடுவேன்
ஆலமுண்டமிடற்றனே அடியேனெஞ்சங்கலங்காமற்
சூலபாசந்தன்னுடனே சுற்றிநின்றுஎன்னுயிரைக்
காலன்கொண்டுபோகாமற் காத்துக்கொள்வாய்கொளவாயே.

அத்தனேபோற்றிபோற்றி அடியவர்க்கெளியாய்போற்றி
பித்தனேபோற்றிபோற்றி பிறைமுடித்தாய்போற்றி
நித்தனேபோற்றிபோற்றி நிருமலர்போற்றிபோற்றி
யுற்றதோர்கூத்தன்வந்தா லுதைத்துடன்கொள்ளுவாயே

ஆதிப்பொருளாயலகடா யணுவுக்கணுவாயாவருக்கு
நீதிப்பரனாய்நிற்குணனாய் நினையுமடியார்க்கெளியோனாய்ச்
சோதிவடிவாய்ச்சுடரொளியாய்த் தோன்றுஞ்சிவனேமாமறலி
மோதிப்பாசமெறியவந்தான் முழுதுநானுன்னடைக்கலமே.

வசனம். இப்படி மார்க்கண்டன் தோத்திரம் பண்ணுவதைக் கேட்டு எமதருமராசன் சொல்லுகிறான்.

விருத்தம்.

வாடாகெடுவாய்மார்க்கண்டா மறந்தானுலு நகிறிவேனோ
ஓடார்கரத்தாரென்செய்வா ருன்னைப்பிடித் [illegible]டுபொழுது
சூடாமணிசேர்விழியிரண்டுஞ் சொருகச்சொருகச்சூலத்தாற்
கூடாஉயிரைப்பிடித்தேநான் கொண்டேபோவேன்கண்டாயே.

வசனம். என்னடாமார்க்கண்டா என்னுடையமனுஷன்வந்து உன்னையழைத்தால்அதற்குவராமலிருந்து மேலானவார்தமைதசொன்னையல்லவா உன்னைவிடத்தக்கதில்லை கர்த்தாவானவர் உன்னைக் கொண்டோடும்போது தடுக்கமாட்டாரென்று வெகுசாய்த்தருமராசன்மார்க்கண்டனைப் பயப்படுத்துகிறான் எ-று.

விருத்தம்.

ஈசன்றன்னுலென்செயலா மிந்தப்பதத்தையினியவரால்
வாசஞ்செய்குமலரிட்டு வணங்கினுலுமாற்றரிது
மோசம்போகேனுன்றனக்கு முடிந்தநாளும்வந்ததுகாண்
பாசங்கொண்டேயுன்னுயிரைப் பற்றிமிகவும்பறிப்பேனே.

ஈரெட்டொழியவயசுனக்கு ஏற்றமுண்டோஎன்னுடனே
மார்பைத்தட்டியெதிராடி வலிமைசொன்னாய்மார்க்கண்டா
பாரிப்போதேநானுன்னைப் பரமேஸ்வரரும்பார்த்திருக்கக்
கூரிட்டொளிர்வேல்தன்னாலே கொண்டேபோவேன்கண்டாயே.

வசனம். அகோதெப்படியென்றால்எமதர்மமகாராஜனானவன் மார்க்கண்டனைப்பார்த்து அடாமார்க்கண்டா நீஎத்தனைதவத்தோடுங்கூடிப்பூசைசெய்தாலும் உனக்குப்பதினாறு வயசுக்குமேலிருப்பில்லையேகர்த்தாதானென்னசெய்வார் அவர்பார்த்திருக்கக்கொண்டுபோகிறேனென்று கருங்கடாவின்பேரில்ஏறியிருந்தஎமதருமரா

சன்கீழிறங்கி இன்றையத்தினம் உன்னுயிரைக்கொண்டுபோகிறே னென்றுதருமராசன் கோபத்துடன்சொல்லஅதைக்கேட்டு மார்க் கண்டன்சுவாமியைப்பார்த்து அபயஞ்சொல்லப்போகிறான் எ-று.

விருத்தம்.

யடியேன்தொழுநம்பரனேயபயம் பரமேஸ்வரனேயபயம்
துடிசேரிடையாள்கணவாவபயந் தூய்நெல்லைப்பதியாயபயம்
கடிசேர்சூலக்கர்த்தாவபயங் கருணாலயனேயபயமபயம்
கொடிதாகியகூற்றுவனைக்கொன்று கொடுப்பாயெல்லாவரமுமென்

வசனம்-இப்படி அபயமிட்டு வருந்தின மார்க்கண்டனைப்பார் த்துசுவாமியருளுகிறார்.

விருத்தம்.

வந்துபயந்தேயபயமிட்ட மார்க்கண்டாநீயஞ்சாதே
யைந்துகரத்தன்றன்றுணை யந்தநமனையறுகவொட்டோஞ்
சிந்தைமகிழ்ந்தேயிருவென்று திருவெண்ணீறுகாப்பணிந்து
மைந்தன்றன்னைத்தன்பிறகே வாவென்றழைத்துவைத்தனரே.

வசனம் இப்படி கைலாசபதியானவர் மார்க்கண்டனைத்தன்கி ட்டவைத்ததைப் பார்த்து எமதருமராசன் சொல்லுகிறான்.

விருத்தம்.

கூசக்கடாவோவல்லவென்று கொடியகோபத்துடனியமன்
ஈசர்க்கெதிரேதழலெழவே யெரியுஞ்செக்கர்க்குஞ்சியுடை
பாசக்கயிற்றாலவன்றனைப் பற்றிபிடிப்போமென்றெண்ணிப்
பேசிக்கொண்டுதான்வந்து பெரியமலைபோல்நின்றனனே.

நடை

நின்றானியமன் நேசமுள்ளபாசமதை
வீசியெறிந்தான்காண் விமலமார்க்கண்டன்மேல்
அப்போதுமார்க்கண்டன் அரனையேகட்டலுற்றான்
வீசினபாசமது விரைந்துசிவன்மார்க்கண்டனையும்
சிக்கெனவேதானிறுக்கி சேர்த்துமேதானிழுத்தான்

விருத்தம்.

வட்டச்சடையார்திருமுதுகை வலுவாய்மார்க்கண்டன்றனை
கட்டிக்கொண்டான்தாமிருகக் கண்ணீர்நின்றுமிகத்ததும்பச்
சிட்டர்க்குரியபிரானுருஞ் சிறுவன்றானுமகப்படவே
துட்டர்க்காலன்பாசத்தைச் சுழற்றியிழுக்கலுற்றானே.

வசனம்.

அகோதெயபடியெனில் எமதருமராசனுக்குக்கோபமுண்டா கிமார்க்கண்டன்பேரிற்பாசத்தைவீசிட மார்க்கண்டனானவன்சுவா மியைதாவிசேர்த்துக்கட்டிக்கொள்ள அப்பாசம்சுவாமியையும்மார் க்கண்டனையுஞ்சேர்த்தது அதைக்கண்டுமார்க்கண்டனானவன் றன்னை ப்பாசமிறுக்கிறதுந்தவிர நம்முடையநிமித்தியஞ்சுவாமியையும்பாசக்

கயிறு ரட்டிழுக்கும்படியாச்சுதேயென்று கண்ணீரானது தாரை தா
ரையாக வோடுகிறது சுவாமிக்குத் தெரிந்து கோபமுண்டாகி எமதர்
மராசனை யாக்கினை செய்யப்போகிறார்.

விருத்தம்.

வாழுமுலகிலருள்பெற்ற மார்க்கண்டனைத்தான்காத்திடவே
யேழைபாகரெழுந்திருந்து இடதுகாலைமிகநீட்டி
வீழவுதைத்தார்நிலம்பார்க்க விண்ணுமண்ணுந்தானதிர
ஆழியுடைத்தாற்போலியமன் அலறிவீழ்ந்தானவ்வெளியிலே.

நடை.

அப்பால்நடக்கும் அதிசயத்தைச்சொல்லுகிறேன்
பாதத்தாலேயுதைக்கப் பாதாளந்தனில்வீழ்ந்து
இறந்தானேயெமன் ஏற்றதொருசிவபரரும்
மார்க்கண்டாநீயு மயங்காதேயெனவுரைத்து
என்றுபதினாறு யிருக்கவரங்கொடுத்து
ஒன்றுக்குமஞ்சாதே யுன்னைநாங்கந்திடமேவோம்
என்றுசிவனாரிவ்வசனஞ்சொல்லிடவே
மார்க்கண்டன்மனதுகளும் மனமகிழ்ச்சியுடன்வாழ்ந்திருந்தான்
அன்றுமுதலுலகிலுள்ள ஆருயிர்கள் இறவாமல்
இருந்ததினாலென்னசெய்வாள் ஏற்றதொருபூமிமாது
கனறிமுகம்வாடி கண்ணிடத்துநீர்சொரிந்து
சாவார்களில்லாமற் றரைப்பாரமாச்சுதினிப்
பூமிபொறுக்காதிருக்கப் புனிதாருள்வேணுமென்று
பைங்கொடியாள்பூமாது பாரஞ்சுமந்ததுக்கு
இந்திரனார்தம்மிடத்தில் போவோமெனநினைந்து
சித்திரபுத்திரரைச் சென்றுகண்டுசொல்வோமென்று
பூமாதுமங்கே புனிதமாயோடிவந்தாள்
வந்துநின்று இந்திரனார் வாய்த்ததிருமாளிகையில்
முறையிட்டுச்சொல்லுகிறாள் முடிந்தான்காண்மறலியுமே
என்றாற்சுமக்கக் கூடுதில்லையென்றுரைத்தாள்
அப்போதுசித்திரபுத்திரர் ஆதரவாய்வந்துநின்று
நாராயணரிடத்தில் நண்ணியேசொல்லுமென
நின்றுசலித்து நெடுமூச்சுத்தானெறிந்து
ஆரமுலைமாது அலறியேசென்றுகண்டாள்

விருத்தம்.

பாலன்செய்தநற்பாக்கியத்தாற் பரமேஸ்வரனார்பாதத்தாற்
காலன்பட்டுவிழுந்திறந்தான் அதனாலுயிர்கள்காசினியிற்
சாலமிகுந்துசாவன்றித் தரணியில்பாரமாச்சுதென்று
ஞாலமடந்தைவருத்தமுற்று நாராயணனைப்போற்றினளே.

நடை.

அப்போதுமாயவரும் ஆனதொருபூமிமாது
உன்னுடையபார மொழித்தருள்வேன்நான்தானும்

போமென்றுசொல்லி யனுப்பினார்பூமாதை
அப்போதுதன்கணைத்துத் தழைந்தேயருள்புரிவார்
சம்புமேகாலத்திற்கு முனிருக்கும்உத்தமனை
இங்கேயழைத்தோடி வாருமென்றாங்கே
கணங்களுமோடியே கணக்கரிடம்வந்துகண்டு
காராயணரும்மை நன்றாயழைக்கலுற்றார்
என்றமொழிகேட்டவுடன் ஏற்றதொருபுத்திரரும்
சிந்தைமகிழ்ந்து சீக்கிரமாய்த்தாமெழுந்து
நாடாளுமிந்திரற்கும் நாகமடந்தையற்கும்
கூடவேதெண்டனிட்டு கூப்பிட்டெழுந்திருந்து
இனித்தானனுப்புமென்று இணையடியைக்கைதொழுதே
நல்லதென்றுஇந்திரரும் நாயகியுமனமகிழ்ந்து
போய்வாருமென்று புகழ்ந்துவிடைகொடுத்தார்
சேனைகள்சூழ்ந்துவரச் செம்பொன்னின்தேரேறிச்
சித்திரபுத்திரனார் சிவன்கயிலைபோய்ச்சேர்ந்தார்
முப்பத்துமுக்கோடி தேவர்களும்வந்துகண்டார்
நாற்பத்தெண்கோடி ரிஷிகளும்வந்துகண்டார்
சந்திரருஞ்சூரியருந் தானவரும்வானவரும்
வாதுமுனிதேவரெல்லாம் வணங்கினாரப்போது
சித்திரபுத்திரருஞ் சிவனாரடிவணங்கி
அருச்சனைகள்செய்து அரன்பாதம்போய்ப்பணிந்தார்
வந்துபணிந்த மகனாரைத்தானெடுத்து
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவந்தீரோ
என்றானார்களிகூற ஏற்றசித்திரபுத்திரரும்
பத்தியுடன்பட்டோலை வாசித்தார்பாங்காக
அப்போதுவிஷ்ணுவும் அகமகிழ்ந்தேயடிவணங்கி
சிவன்கயிலைசென்று செப்புகிறார்நல்வசனம்
எமதருமராசன் இறந்ததினாற்பூமாது
சாவன்றியிருந்தவுயிர் சுமைசுமக்கமாட்டாமல்
அல்லல்படுந்துயர மாற்றவேவேணுமென்று
சிவனாரிடத்திற் செப்பினாரப்போது
எல்லோருங்கூடி யிசைந்தார்சிவனிடத்தில்
சிவனாருமங்கே சித்தம்மகிழ்ந்திடவே
பிரமாவுமன்னேரம் பெருமையாய்த்தானுரைப்பார்
வயசுபதினாறாச் சிருட்டித்தசமவர்க்குக்
கணக்குப்படிசென்றான் காலத்தையறிந்துநமன்
தவத்தையிகப்பாராமற் றானேதான்மாண்டனன்காண்
புத்திக்குறைச்சலினாற் போய்மாண்டானந்தநமன்
பிள்ளைகள்செய்தகுற்றம் பொறுத்தருளவேணுமையா
ஆரிடத்திற்சொல்வோம் அரனேநீரல்லாமல்
வேறொருவருண்டோ விண்ணப்பங்கேட்கவென்றார்

இப்படியேவானவர்கள் எல்லோருமுறையிடவே
சித்தமிரங்கிச் சிவனாருமேதுசொல்வார்
இப்படியேயியம னினிமேலுஞ்செய்யாமல்
சொல்லுகிறேன்கேளுங்கள் சுருக்கமாயொன்றுசொல்வார்
அன்னதானஞ்செய்வோர் அருங்கோவில்கட்டினவர்
கன்னிகாதானஞ்செய்வோர் கன்றுக்குப்பால்விட்டோர்கள்
சிவன்பாதம்சென்றவர்கள் சிவபூசைசெய்திடுவார்
அன்னைபிதாவை யனுதினமுந்தான்தொழுவார்
கோவிலுக்குநித்தம்போய்க் கும்பிட்டுவருவோர்கள்
பார்வதிபூசை பத்தியாய்ச்செய்வோர்கள்
வைகுண்டநாதருக்கு வழியடிமைசெய்தவர்கள்
நன்மைசெய்தவர்மேல் நாடாதேயென்றுசொல்லி
இவ்வளவுபேரும் இன்பமுடனென்னிடத்தில்
கொண்டுவரவேணுமென்று கூறியேபின்புசொல்வார்
யேமனையெழுப்பி யின்பமுடன்மகிழ்ந்து
கூப்பிடுங்களென்றுசொல்லி கோமான்விடைகொடுக்க
அருளிப்பாயென்றுசொல்லி அந்தகனைத்தானெழுப்ப
தண்டாயுதத்தோடே யெழுந்தானியமனுந்தான்
வாய்புதைத்துத்தெண்டனிட்டு வணங்குகிறான்தானியமன்
அப்போதரனார் அகமகிழ்ந்துபார்த்தவனை
நன்மைகள்செய்தவர்மேல் நாடாதேயென்றுசொல்லி
ஆயுதங்களெல்லாம் அன்பாகத்தான்கொடுத்துத்
தருமக்கணக்கெழுதித் தான்வந்தவுத்தமரை
நன்மைதின்மையுள்ளபடி நமனருகேதானிருந்து
வாக்குடனேசொல்லுமென்று மகிழ்ந்துமேதானுரைத்தார்
இருபேருமொன்றாய் எல்லோரையுமனுப்பி
எமலோகபட்டணத்தைச் சேருகிறாரிருபேரும்
பட்டைகள்மிகநெருங்கப் பாரக்கடாவேறி
வெற்றிக்குடைபிடிக்க வெண்சாமரைபோடக்
கணக்கரும்நல்ல கற்பகதேரேறி
இயமதர்மன்கூட இசைந்துவந்தாருத்தமனார்
எட்டுதிசையு மெங்குமேதான்முழங்க
திக்குதிசைகளெல்லாஞ் சிறப்பானபந்தலிலே
கவிவாணர்பாடக் கட்டியர்களாடிவர
நாடகசாலைப்பெண்கள் நாட்டியங்களாடிவர
பதினெட்டுவாத்தியங்கள் பண்பாகத்தான்முழங்க
வாசங்கள்தான்வீச வான்கவரிதான்வீச
பொன்னுலகத்தாரும் போதவேசூழ்ந்துவரத்
தேவாதிகளெல்லாஞ் சிறப்புடனேதான்வரவே
இந்தப்படியே யிருபேரும்வந்திருந்தார்
புட்பமாரிபொழிந்து பொன்னுலகோர்வாழ்த்தியிட

வானும்புவியு மற்றுலகிலுள்ளதெல்லாம்
நன்மையுந்தின்மையு நன்றாய்க்கணக்கெழுதி
எமதருமன்மாளிகையில் இருக்கின்றார்நற்கணக்கர்
நான்குவாசல்வழிக்கு நடுவேயோர்மாளிகையில்
சித்திரபுத்திரருஞ் சிறப்பாகத்தானிருந்து
பட்டோலைதன்னைப் பதிவாகவாசித்தார்
திருந்தவேநன்மைசெய்தோர் சிறந்தவழிவருவதற்கு
வடக்குவாசல்வழியை வரிசையாய்ச்செய்யலுற்றார்
மாணிக்கஞ்சேர்த்த வயிரக்கால்தானாட்டி
இடம்பெறவேபந்தல் எழிற்காவணம்போட்டு
மாடங்கள்கட்டி வயிரவிளக்கேற்றி
கூடங்கள்கட்டிக் குளிர்ந்தமலர்க்காவுடனே
நல்லதண்ணீர்ப்பந்தல்களை நன்றாகவுண்டுபண்ணி
புண்ணியஞ்செய்வதற்குப் பொருத்தமிகவுண்டாக
அநுக்கணமேபேரை யவ்வழிக்குகாவல்வைத்து
இதுதான்கயிலைவழி யென்றேபுண்ணியற்கு
சொல்லும்படிக்குச் சுருதியுள்ளகாவலரைத்
திட்டங்கள்செய்து சிறப்புடனேவைத்தார்காண்
கீழ்வாசல்தன்னருகே கேசவனைத்தானோக்கி
ஞானநிஷ்டைசெய்தவர்கள் நல்லவழிவருவதற்கு
சிவஞானபத்தர் தெரிசிக்கவருவதற்கு
பராசத்திபத்தர்கள் பண்பாயிருப்பதற்கு
மண்டபமுஞ்சூளிகையும் வகையுடனேதான்வைத்து
மாளிகைகூடம் வகுப்பாகச்செய்யலுற்றார்
வெள்ளிக்கதவுமிட்டு வேதியரைக்காவல்வைத்து
வைகுண்டநாதருக்கு வழியடிமைசெய்தவர்கள்
வருகிறவழியென்று வைத்தாரேதூதுவரை
வேறுமொருவாசல் விரைவாகவகுக்கவென்று
வந்துதெற்குவாசல் வழிசேறுமுட்பரப்பி
நெருப்புப்பரந்தெங்கும் நின்றெறியவுண்டுபண்ணி
சுண்ணாம்புஞ்சேறுஞ் சுடுமணலுமுண்டாக்கி
யேதெரியவெட்டிப் பெருங்கழுக்கள்தானாட்டி
கூரைப்பறங்காவுங் குளிர்ந்தநிழலில்லாமல்
நாயுநரியும் பெருங்கடுவாயோநாயும்
கட்டெறும்புகொட்டுந்தேள் கடியதொருபாம்புடனே
அட்டைப்புழுக்குழியு மரணைபுழுக்குழியும்
காக்குழியும நன்றாகவுண்டாக்கி
அரியதொருபாதகரை யடித்திழுத்துவரச்சொன்னார்
கல்லுங்கரடுங் கடியமணல்பரப்பி
பாதகரைத்தெண்டிக்கப் பாவிகளைக்காவல்வைத்தார்
மேற்கேயொருவாசல் விதம்விதமாய்ச்செய்யும்வகை

பார்க்கப்பயங்காட்டும் படர்பூதப்பிசாசுகளும்
கருநாயுஞ்செந்நாயுங் கலந்துகட்டிநிறுத்திவைத்தார்
குரைக்குந்தலைப்பேய்கள் கூட்டமாய்நிறுத்திவைத்தார்
செக்குலக்கைகலத்திருகைச் சிறப்பாகவுண்டுபண்ணி
செப்புத்தூணுட்டியதிற் றீயெறியநிறுத்திவைத்தார்
இரும்பாலேதூண்டில்களை யெங்குமேதாணுட்டி
நிகரில்லாத்தரைதனிலே நெருப்பெரியச்செபபுருக்கி
பஞ்சமாபாதகர்க்குப் பாப்பியேயசெய்துவைத்தார்
கிங்கிலியரங்கே கெட்டியாய்க்காவல்வைத்தார்.
இப்படியேவாசலக ளெல்லாம்வகுத்தபின்பு
செப்பமுடனிருபேருஞ் சிறப்பாகதானிருந்தார்
இங்கிதங்கள் பேசி யிருபேருந்தான்மகிழ்ந்து
வள்ளுவனுக்காளவிட்டு வரவழைத்தாரந்நேரம்
வள்ளுவனும்வந்து வலமாகவந்துநின்று
அடியேனையிங்கே யழைத்ததேதுக்கெனவே
படியேழுஞ்சென்று பறையடிக்கநீங்களு
சீவசெந்துக்களெல்லாம் சிறப்பாகத்தானறிய
காயிருக்கப்பழமுதிரும் படியடியேமுரசை
அடித்துவாவென் றுசொல்லி யனுப்பினாரந்நேரம்
அப்படியேவள்ளுவனும் யானைதனைக்கொண்டுவந்து
ஆனைக்குள்ளவரிசைகளை யன்பாயலங்கரித்து
ஆபரணமுள்ளதெல்லாம் அடைவாகவேபூட்டி
தம்பட்டம்வைத்துத் தனிக்கால்வழியேதான்
ஆனைதனிலேறியே புறப்பட்டானப்போது
துர்க்கைதிருக்கோயில் தூரவேதான்தெரிய
துய்யசரிவிட்டிறங்கித் துர்க்கையைத்தான்பணிந்தான்
மதுவுதனைக்கொடுத்தாள் மாகாளியப்போது
அரக்குமதுவு மளவின்றித்தான்குடித்தான்
பதினாலுலகறியப் பறையறைந்துசொல்லுகிறான்
ஆண்சாதிபெண்சாதி ஆகியேதான்பிறந்த
நாலுவகைச்சாதிகளும் நன்றாகத்தானறிந்து
பழமுதிரக்காயிருக்க வென்றுசொல்லிப்பண்புடனே
வெய்யபெருந்தோளான் வீதியிலேவந்துநின்று
முறையிட்டுத்தான்பறையு முழங்கினானப்போது
இந்தமொழிகேட்டுடனே யெல்லாருந்தான்மகிழ்ந்து
அந்நேரஞ்சிறுபிள்ளைக ளனேகம்பேர்தான்கூடி
இரைச்சலிட்டுக்கொண்டு எதிராகநின்றதுவே
அப்போதுவள்ளுவனு மானைதனைநோக்கி
அடித்தானேபிள்ளைகள்மே லானவொருகோபத்தால்
அப்போதுபிள்ளைகளுக் கதிககோபமுண்டாகி
கையில்மணலெடுத்துக் காற்றிலேதூற்றிவிட்டார்

கண்ணில்மணல்விழுந்து கசக்கியேவள்ளுவனும்
கோபம்பெரிதாகிக் குணக்கேடாச்சொலலிவிட்டான்
குடித்தவெறியாற் குணந்தப்பிசொல்லிவிட்டான்
பூவுதிரப்பிஞ்சுதிரப் பெருக்கெனவேயேட்டுதிக
காயும்பழமும் கலந்துதிரவேணுமென்று
தினம்பிறப்பாராயிரம்பேர் தினமிறப்பாராயிரம்பேர்
கனமிகுதியேருமற் றூரணிப்பாரங்குறைய
வன்றமதுகுடித்த வெறியாலிரங்காது
அடியடியென்று அடித்தானபெருமூரசை
அப்படியேதானடித்து அவ்விடத்தைவிட்டேகி
சித்திரபுத்திரர்பாற் சென்றேயடிபணிந்தான்
அந்தக்கொடும்பறைகேட் டவ்விடத்திலுள்ளவர்கள்
இந்தவகையேதென்றே யெழூதுமேதான்பிறகே
எல்லோருமொன்று யெமலோகம்போய்ப்புகுந்தார்
நல்லதர்மராசனையும நற்கணக்குநாதனையும்
வந்துமிகப்பணிந்து வள்ளுவனங்குவந்து
மன்னவரோர்கள்சொன்ன மாற்றத்தைவிட்டுவிட்டு
கருங்குழியிற்பூமுதலும் கருத்தரித்தபின்மூகனும்
வடுப்பிஞ்சுதாயுதிர வென்றுரைத்தேவள்ளுவனும்
ஏற்றதொருபறையடித்தா னெல்லோருந்தான்கேட்க
என்றுதொழுதுசொன்னு ரிருபேருந்தான்பார்த்து
அந்நேரமவர்களுக் கதிககோபமுண்டாகி
சொன்னமொழியொன் றிருக்கச் சொற்றவறியடித்தவனை
கோபம்பெரிதாகிக் கூட்டிவரச்சொன்னூர்கள்
வந்துமேவள்ளுவனு மலரடியைப்போற்றிசெய்ய
வாராய்நீவள்ளுவனே வாய்மதங்களோதுரைத்தாய்
அப்போதுவள்ளுவனு மடிபணிந்தங்கேதுரைப்பான்
இப்போதுவந்தகுறை யென்னுலேவந்ததல்ல
அரக்குமதுமாகவளி யம்மைமிகவார்த்தாள்
அரக்குவெறியால் மூழுக்கினேனம்மூரசை
பிள்ளைகள்தூர்ச்சனர் பிழைகேடாய்சொல்லிவிட்டேன்
இந்தப்பிழையைப் பொறுத்தருளவேணுமையா
குடித்தவெறியாற் குணந்தப்பிச்சொல்லிவிட்டேன்
உள்ளமொழிசொன்னதெல்லா முறுதியாமென்றுசொலவ
மாய்கையதுயென்ன வள்ளுவனைத்தான்பார்த்து

சாராயந்தான்குடித்தான் தவறுவந்துவிட்டதினால்
வள்ளுவனைசொல்ல வகையேதுமில்லையென்றார்
பிள்ளைகளாலே பிழைகேடுவந்ததென்றார்
வள்ளுவன்றானென்செய்வான் மற்றபேரேதுசெய்வார்
வள்ளுவன்சொற்படியே மானிடவரெல்லோரும்
வாழ்வுபெறவேவாழ்ந்து மகிழ்ந்திருங்கள்புவிமீதில்
என்றேயெமனார் இன்பமாய்த்தானுரைத்தார்
பூலோகத்திலுள்ள புகழ்ந்தமனுவையெல்லாம்
அவரவரிடத்தில் ஏகிறைப்போது
இருந்தாரிருவருந்தான் இரத்தினமணிமண்டபத்தில்
மணிமுடியைதான்சூட்டி வண்மையுடன்தானிருந்து
பட்டோலைகள்தன்னைப் பரிந்துமிகவாசிக்க
அப்போதுசெட்டிச்சி யம்மையொருசீமாட்டி
அமராவதிப்பெருமாள் அன்னைபோற்காத்தளிப்பாள்
தர்மராஜாவின்தேவி தான்செய்தபுண்ணியங்கள்
அழகியபுத்தகத்தில் அகப்படவேயிப்போது
இயமனார்தன்னிடத்தி லியல்பாகவாசித்தார்
இந்தவிபரம் இனிமேல்விளம்புகிறேன்
இந்தக்கதைகேட்டவர்க ளிராசர்பதம்பெறுவார்
நன்றிப்பெருங்கதையை நாள்தோறும்படிப்பவர்கள்
பாடிப்படித்திடவே பத்தியுடன்கேட்டவர்கள்
நாடியெழுதினவர் நல்விரதந்தானெடுத்தோர்
கற்றவரெல்லாம் களிப்பாய்ப்படிப்பதற்கு
நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலைதனில்
நாராயணசாமிப்பிள்ளை நலமாகஅச்சிலிட்டார்
புலமாகப்பெருஞ்செல்வம் படைத்துமேவாழ்ந்திருப்பார்
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரூன்றி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழியவே.

சித்திரபுத்திரநயினார் கதை முற்றிற்று.

பரமபதி துணை.

# அமராவதி கதை.



செட்டியம்மையென்றே சீமாட்டிதன்கதையை
காரணத்தால்நான்பாடக் கணபதியேமுன்னருள்வாய்
தர்மராசாவின தயவானதேவியென்பாள்
அமராவதியென்ற அழகானநற்பெயரால்
பூதலத்திற்செல்வம் பொருந்தமிகவுண்டாக்கி
மட்டில்லாச்செல்வம் வளர்ந்துமிகவுண்டாகி
அன்னசுற்றத்துடனே யருள்பெறவேதான்வாழ்ந்து
முதற்கொட்டில்கட்டி முடியும்வாழ்வுண்டாக்கித
தருமங்களானே தவறாமல்செய்துவந்தாள்
பாவங்களென்றுசற்றும் பக்கத்தில்கேட்டறியேன்
இத்தப்படியே யியல்புடனேதானவாழ்ந்தாள்
நயினார்தனிநோன்பு நாவிலெடுத்தறியாள்
கணக்கரென்றசெய்தி கனவிலுங்கேட்டறியாள்
மூப்பாலுங்காசி முடியாமல்வாழுகின்றாள்
சிவஸ்தலம்விஷ்ணுஸ்தலம் தெரிசனங்கள்செய்தறியாள்
சித்திரபுத்திரர்நோன்பு சிந்தையிலேவைத்தறியாள
இவள்செய்திகளை இயல்கணக்கர்தாமறிந்து
யமதருமராஜனுடனின்பமாய்த்தானுரைக்க
அவள்தருமகற்கணக்கை யணுவளவுந்தப்பாமல்
கேட்டாரியமருந்தான் கிருபையுடனேயிருந்து
அவள்செய்தபுண்ணியங்க ளடைவாகச்சொல்லுகிறார்
பட்டணமெல்லாம் பலதட்டியாராய்ந்து
அன்னக்கொடிகட்டி யமுதுபடைத்திடுவாள்
அதிதிபரதேசியர்க்கும் ஆருமற்றார்தங்களுக்கும்
ஆராய்ந்துதேடி யமுதுமிகக்கொடுப்பாள்
அத்தாலங்கேட்டவர்க்கு அமுதமேதான்கொடுப்பாள்
மாக்கூரபூசைமுதல் மனமகிழ்ந்துசெய்திடுவாள்
கோட்டைக்குத்தண்ணீர் குளிர்ச்சிமிகவுண்டாக்கிப்
பாணக்கம்நீர்மோர் பதிவாகச்செய்துவைத்தாள்
சிநகிடைமாதத்தில செழிப்புடனேநற்துடையும்
விசிரியுந்தான்கொடுத்து வெப்பங்கள்தணித்திடுவாள்
கன்னிகாதானங் கருதிமுடித்துவைப்பாள்
வேதியர்க்குள்ளதெல்லாம் விரும்பியேகொடுத்திடுவாள்
ஆடையில்லாபேர்களுக்கு ஆடைமிககொடுத்திடுவாள்
சனிவாரமெண்ணெய தப்பாமற்கொடுதது வந்தாள்
நந்தவனமுண்டாக்கி நற்பூக்கள்தான்பறித்து

ஆலயங்கள்தன்னி லடைவாகச்சாத்துமென்றுன்
தூரத்துக்குதூரஞ் சமைத்தாங்கிகட்டிவைத்தாள்
காதத்துக்காதங் கற்கிணறுகட்டிவைத்தாள்
பிள்ளைபாற்றின்பண்டம் பெருக்கவேதான்கொடுப்பாள்
வெட்டுந்தலையைப் பொருள்கொடுத்துமீட்டிடுவாள்
வட்டியில்லாமற்கொடுத்து வாங்கிமிகவைத்திடுவாள்
வேந்தனுக்குஅஞ்சி விரும்பிவருவார்க்கு
தேருதலைச்சொல்லி யடைக்கலங்கள்தான்கொடுப்பாள்
அன்னங்கள்குத்திக் களவுசெய்யவருபவர்க்கு
அஞ்சாதேபோவென்று ஆதரவுசெல்லிடுவாள்
ஏழைபரிதேசியர்க்கு இல்லடமும்கட்டிவைத்தாள்
இடிந்தமடமுதலாய் எடுத்துமேபுதுப்பித்துப்
பூப்பியர்கள்போட்டுப் புதுக்கனிகள்தான்கொடுப்பாள்
அனுதிப்பிணத்தை யடக்கிவைப்பாள்கண்டீரே
ஆயிரங்கோட்டையரிசி அன்றைக்கன்றுசொல்லிடுவாள்
அதற்கானகாய்கரியு மப்படியேதான்கொடுப்பாள்
சம்பாரஞ்செல்லுவதை தடையறவேதான்கொடுப்பாள்
இந்தப்படிதரும மெவ்வளவுந்தப்பாமல்
செய்துமேதானுஞ் சிறப்பாகத்தானிருக்க
விரதமும்நோன்பும் விரும்பாதபாவியென்று
கணக்கருமங்கே கடுங்கோபமுண்டாகி
என்னதானஞ்செய்தாலு மேந்திழையாள்தன்னைவிடோம்
பூமிதனிலிருந்து பொருந்தியேவாழாமல்
அதற்கானபடிசெய்ய அழைப்பிக்கவேணுமென்று
கணக்கருக்குக்கைக்கூலி கட்டுவாருலகமதில்
இந்தவசனமதை யெவ்வளவுமறியாமல்
இருந்தஅமராவதியை யிங்கழைக்கவேணுமென்று
ஏவினார்தூதுவரை யின்னமொருவார்த்தைசொல்வார்
அவளுடையவாச லடையாளங்கேட்டீரோ
தென்னமரங்களுஞ் சேரவேசூழ்ந்துநிற்கும்
கப்பல்படகுமுதல் கரையருகேவந்துநிற்கும்
தீவுகளிலுள்ளதுகள் சேகரமாய்வந்துநிற்கும்
பசுக்களொருகோடிநிற்கும் பைங்கொடியாள்வாசலிலே
அரதேசிபரதேசிக் கன்னம்வழங்கிடுவாள்
என்றுசொல்லிநற்கணக்கர் ஏவினார்தூதுவரை
அந்நேரந்தூதுவரை அதிககோபமுண்டாகி
இருப்புத்தடியுடனே யேற்றதோராயிரமும்
பாசக்கயிறும் பெருவலையும்தானெடுத்து
வந்துவளைந்தார்கள் மனையாட்டிவாசலிலே
வாசலிலேவந்துநின்று வதுமையெல்லாங்கண்டார்கள்

அதிதிபரதேசிகட்கும் அன்னங்கொடுக்கிறதும்
கூனர்குருடர் குறைக்கால்முடவருக்கும்
ஆராய்ந்துபார்த்து அமுதுகொடுக்கிறதும்
தருமங்களெல்லாந் தயவுடனேசெய்கிறதும்
இத்தனையுங்கண்டு இயல்பானதூதுவர்கள்
அமராவதியாளை யழைத்துவரச்சொன்னார்கள்
இவளைநாமழைத்துப் போனோமேயாமாகில்
தருமங்களெல்லாந் தவிர்ந்துவிடுங்கண்டீரே
அன்னக்கொடிகளெல்லா மலைந்துவிடுங்கண்டீரே
என்றுசொல்லித்தூதுவர்கள் யேங்கிமனங்கலங்கிக்
கையில்தடியைக் கடக்கவேபோட்டுவிட்டு
நின்றுபெருமூச்சும் நெடுமூச்சுத்தானெறிந்தார்
அந்நேரமோடிவந்தாள் அமராவதியாளும்
கண்டாளேதூதுவரைக் கலங்கியிருக்கிறதை
அமராவதியாள் அவர்முகத்தைத்தான்பார்த்து
வாருங்கள்மக்களே மயங்கியிருப்பானேன்
இத்தனைநேரமட்டும் இளைப்பாயிருந்தீரே
அடியாள்தன்பேரில் அபராதமுண்டுகண்டீர்
என்றுசொல்லியிங்கிருந்து இனியமுதுகொள்ளுமென்றாள்
அப்போதுதூதுவர்கள் அமுத்தமொழியுரைப்பார்
இந்நேரம்நாங்கள் இனியமுதுகொள்வதில்லை
என்றுசொல்லித்தூதுவர்கள் இருந்துவிசாரமுற
வாருங்கள்மக்களே வருந்திமெலிவானேன்
கன்னமிடவந்தீரோ களவுசெய்யவந்தீரோ
வேந்தனுக்கஞ்சி வெருண்டுதான்வந்தீரோ
தாய்க்குந்தாயாகித் தானிருக்கவுங்களுக்கு
உண்டிருக்கஅன்னமுதல் உடமையும்நான்தருவேன்
அஞ்சாமல்நீங்க ளன்னங்கள்தான்பொசிக்க
வாருங்களென்று வருந்திமிகவழைக்க
இவ்விடத்தில்தானமுது பொசித்தோமேயாமாகில்
எங்கள்நயினார் எழுதுவார்பட்டோலை
ஆனதினால்நாங்க ளமுதுபொசிப்பதில்லை
இருந்தரசாளுமென்று ஏகினார்தூதுவர்கள்
வந்துகணக்கர் மலரடியைத்தெண்டனிட்டுச்
சித்திரபுத்திரரே சீமானேகேளுமையா
செட்டிச்சியாலெங்களைத் தீக்குழிவிற்போட்டதுவும்
செட்டிச்சியைநாங்கள் தீண்டோமொருநாளும்
என்றுசொல்லியக்கணக்கர் இருகண்ணுந்தான்சிவந்து
உங்களையுன்னை உபசாரஞ்சொன்னாளோ
மற்றுமொருதூதுவரை வரவழைத்தேதுசொல்வார்
அமராவதியென்குத்தி ஆனதர்மஞ்செய்வதைக்கண்டு

என்னோம்புகொண்டா ளெந்தனையும்நினையாமல்
பூதலத்திற்செல்வம் புகழ்பெறவேதானிருந்து
தனிக்குறும்புசெய்துகொண்டு தானியிபிருப்பவளோ
இந்நேரமிங்கே யழைத்து வாவென்றுசொன்னார்
என்றுசொல்லித்தூதுவரை யியல்பாகத்தானனுப்ப
அந்நேரந்தூதுவர்க்கு அதிகோபமுண்டாகி
இருப்புத்தடியெடுத்தார் யேற்றதொருங்கிலியர்
வந்துவளைத்தார்கள் வாழ்வரசிவாசலிலே
நந்தவனம்வைத்து நறுமபூப்பறிக்கிறதும்
அன்னங்கொடுத்து ஆதரவுசொல்லுவதும்
சத்திரங்கள்வைத்து தயவாகநடக்கிறதும்
தருமங்களெல்லாந் தவறாமல்செய்கிறதும்
கண்டார்கள்இங்கிலியர் கவலைமெத்தவுண்டாகி
கையிற்றடியைக் கடக்கவேவிட்டெறிந்து
தலையிலேகையைவைத்துச் சலிப்பாயிருக்கையிலே
அந்நேரம்அங்குவந்தாள் அமராவதியாளும்
வாருங்கள்மக்களே வாடியிருப்பானேன்
அமுதுகொள்ளவாருமென் றழைத்தாளேயப்போது
பாணக்கம்வாங்கிப் பசியாறக்குடித்தார்கள்
இப்போதிவளை யழைத்துமேபோனக்கால்
தருமங்களெல்லாந் தவறிவிடுமென்றுசொல்லி
ஏதுகுறையென்று ஏகினார்இங்கிலியர்
சித்திரபுத்திரரே சீமானேகேளுமையா
எங்களையும்நீங்கள் என்னபழிசெய்தாலும்
செட்டிச்சியைக்கூட்டி வரமாட்டோமென்றுசொன்னார்
அந்நேரமக்கணக்க ரதிகோபமுண்டாகி
உங்களுக்குக்கைக்கூலி கட்டினாளுதாரி
பாணக்கம்வாங்கிப் பதிவாய்க்குடித்தீர்கள்
இதற்கோயனுப்பிவைத்தே னென்றாரேயுத்தமனார்
அதையுங்கணக்கெழுதிக் கொண்டாரேயுத்தமனார்
சினத்துமிகவுரைத்துச் சீறியேயப்போது
மற்றுமொருதூதுவரை வரவழைத்தாரந்நேரம்
பெற்றதாயைக்கொன்ற பெரும்பாவிமொட்டையனைக்
கொண்டகணவனைக் கொன்றகொலைப்பிராமணியை
இவர்கள்தனையழைத்து யேவினார்நற்கணக்கர்
அரைநாழிகைப்பொழுதி லழைத்தோடிவாருமென்றார்
அந்நேரமொட்டைய மானபிராமணியும்
ஆயுதங்கள்தானெடுத்து அடைந்தாரிருவருந்தான்
வந்துதலைப்பட்டார்கள் வாழ்வரசிவாசலிலே
மனையிலொருபுறத்தே மறைவாயிருந்தார்கள்
[illegible] தருமங்கள் தயவாய்நடக்கிறதை

இத்தனையுங்கண்டு எடுத்துரைத்தான்மொட்டையனும்
இவ்வளத்தனை தருமமினிதாசச்செய்தாலும்
நயினாருரைத்தபடி நான்விடுவதில்லையென்றான்
என்றுசொல்லிமொட்டையனு மிருகண் ணுந்தான்சேற
அந்நேரமேதானும் அமராவதியாளும்
தீர்த்தமுமாடித் தெருவீதிவருகையிலே
பூனையாய்வந்து குறுக்கிட்டான்மொட்டையனும்
அப்போதுசெட்டிச்சி யனேகங்கவலையுற்று
துக்கமுண்டாகித் துடித்துதேவலனுகண்ணும்
மயக்கம்பிறந்து மதிமறந்துஅன்னேரம்
ஏதோகொடுமை யினிகேட்கவேணுமென்று
பூனைக்குறுக்கிடவும் போந்தகூறல்லவென்று
தருமங்கள்செய்வதிலே தப்பிதமுண்டாச்சோ
என்றுசொல்லியம்மை யேற்றதொருபாத்திரத்தில்
அமுதுகறிகளை யப்போதுசாணெடுத்துச்
செயகண்டியடித்துத் தெருவெல்லாந்தான்திரிந்து
ஆராய்ந்துதேடி யமுதுகொடுத்திடவே
இட்டசட்டமாகச் செய்வித்தாளந்நேரம்
ஒன்றுந்தவறாமல் உள்ளபடியேநடத்தி
வந்தாளரண்மனையில் வாழ்வரசிதானுமப்போ
இருக்கும்பதியில் இயல்பாகத்தானிருந்து
பேத்திமார்பூட்டிமார் பிரியமுடனேயிருந்து
பாலோடுநெய்யும் பதிவாயமுதருந்திச்
சாந்துபுனுகுஞ் சவ்வாதுமுதல்தானணிந்து
புஷ்பாதிகளெல்லாம் போதவேதான்சூடிச்
சந்தோஷமாகவே தானிருக்கும்வேளையிலே
கொல்லவந்தகூற்றவனும் கோலப்பிராமணியும்
அவ்வேளைதான்பார்த்து அவள்நடையில்வந்தார்கள்
வாசற்படியில் வந்துநின்றாளந்நேரம்
கண்டமராவதியாளும் கர்மமேவென்றுசொல்லி
இத்தனைநேரமட்டும் இளைப்பாயிருந்தீரே
இருபேரும்நீங்கள் இனியமுதுகொள்ளுமென்றாள்
சத்திரத்தில்வாருமென்று தான்விரும்பிச்சொன்னாளே
அப்போதுகூற்றவனு மானபிராமணியும்
இந்நேரம்நாங்கள் அமுதுகொள்வதில்லையெனப்
பலகாரம்நான்தருவேன் பதிவாகக்கொள்ளுமென்றாள்
பலகாரம்நாங்கள் புசிப்பதில்லையென்றார்கள்
எதின்பேரிலிச்சையென்று ஏந்திழையாள்தான்கேட்கப்
பாலின்மேலாசையென்றான் பிராமணியுமப்போது
பாலும்பழமும் பரிவாகக்கொண்டுவந்தாள்
காய்ச்சினபால்நாங்கள் [illegible]

கண்காணுப்பால்தான் கறந்துதரவேணுமென்றார்
இதுவுமொருசோதனையோ வென்றுமனதிலெண்ணி
ஆனாற்கறந்து அடைவாகத்தருவேனென்றாள்
அணைக்கயிறுங்கடைக்காலும் அன்பாகத்தானெடுத்து
காராவினண்டையிலே காரிகையாள்தான்வரவே
கொல்லவந்தகூற்றவனும் குடுகுடெனஓடிவந்து
கொம்புதனிலேறிக் கொற்றவனுந்தானிருக்க
அணைவென்றுத்தானும் அமராவதிவரவே
அப்போதுபசுவுக் கதிகோபமுண்டாச்சு
காடிகழுநீர் கலந்துவைப்பதில்லையென்று
வைக்கல்பிடிங்கி வாரியேவைக்கயிலே
குத்தியெடுக்க கூறியகொம்பதனால்
இருந்தாள்அமரா வதியுமிகக்கலங்கிக்
கதறத்தொடுத்தாளே காரிகையாளந்நேரம்
ஏங்கியழுதாள் எமலோகந்தானறிய
தருமங்கள்செய்ததிலே தனக்கேடுவந்ததுண்டோ
பொல்லாதகாலமாய்ப் பூனைகுறுக்கிடவும்
துர்க்குறிகள்காட்டினதுஞ் சோதனையுமுண்டாச்சு
ஏதுகுறைகளுண்டோ என்னமோவென்றுசொல்லி
எண்ணாததையெண்ணி யேங்கியுயிர்பிரிந்தாள்
கொல்லவந்தகூற்றவனும் கோலப்பிராமணியும்
பாசக்கயிறும் பறுவலையுந்தானெடுத்து
கட்டினாப்போது கண்மண்டைதான்பிதுங்க
இறுப்புத்தடியால் இரக்கமற்றுந்தானடித்துப்
பாப்பாத்திகள்ளியவள் பாசக்கயிறுபிடித்து
அடித்தாளேகூற்றுவனும் அமராவதியாளைக்
காமவல்லியென்றுமொரு காற்றுவந்துவீசிடவே
ஆகாரமின்னொளியு மதிகோபத்தோடுவந்து
இருப்புத்தடிமுறிந்து இறக்கவற்றார்தான்விழவே
பாசக்கயிறும் பருவலையுந்தான்தெறிக்க
அப்போதுகூற்றுவனு மானபிராமணியும்
திடுக்கிட்டுநின்று தடுமாறியந்நேரம்
இத்தனைக்குந்தருமங்கள் இனிசாகச்செய்தாளே
இவளைநாம்விட்டுவிட்டால் இயர்கணக்கரேதுசொல்வார்
கோபித்துக்கண்சிரிக் கொலைகளவிற்போட்டிடுவார்
எப்படியுந்தானிவளைக் கொண்டுமேபோவென்று
இருபேருமாக நினைந்துமேதான்துணர்ந்து
வலைக்கயிறுதானெடுத்து வரியவேதான்பூட்டிக்
கட்டியிழுத்தார்கள் காரிகையந்நேரம்
கண்கள்தெரித்துவிழக் கட்டியிழுத்தார்கள்
கொண்டுபோகவிட்டார்கள் கொற்றவர்முன்பாகச்

சித்திராபுத்திரருஞ் சிறியேயேதுசொல்வார்
தருமத்தைத்தானே தயவாய்நினைத்தாயே
என்றுசொல்லிநற்கணக்கர் இருகணனூர்தான்சிவக்க
காட்டிக்கொடுத்தாரே கடுந்தூதர்கிட்டவுந்தான்
பின்கட்டாய்கட்டிப் பிடரிமேலகுத்துமென்றார்
செப்புத்தூணோடே சேரவேகட்டுமென்றார்
நாராசங்காச்சி நடுச்செவியில்குத்துமென்றார்
உச்சிதனிலாணி யோங்கியடியுமென்றார்
அமராவதிக்கு அதிககோபமுண்டாக்கி
தண்ணீர்தவிக்குதென்றாள் தாமக்குழலாளும்
சித்திரபுத்திரனார் சீமானார்தான்கேட்டு
செம்பையுருக்கித் தெளியவைத்துக்கொடுங்களென்றார்
அந்தப்படிதூதுவர்க ளமராவதியாட்கு
செம்பையுருக்கித் தெளிபவைத்துத்தான்கொடுத்தார்
பாணக்கமென்று பதிவாகத்தான்குடித்தாள்
இதையுமறிந்தாரே யியல்பானநற்கணக்கர்
மழுவையுங்காச்சி வைக்கவேசொன்னார்காண்
சந்தனசேறாகத் தான்குளிர்ச்சியானதுவே
அப்போதொருகாற்று அவனிதனில்வந்தடித்து
கயிறுதெரித்துக் கடுந்தூதர்தான்விழவே
கணக்கருமப்போது கடுககோபமுண்டாகி
ஐந்நூறுகாத மகலமுள்ளகாட்டூடே
கல்லுங்கறடுங் காரமுள்ளுந்தான்படவே
கட்டியிழுக்கவென்றார் கண்விழிகள்தான்பிதுங்க
இந்தப்படிகாடெங்கும் இழுக்கலுற்றார்தூதுவர்கள்
அந்நேரங்காட்டி லதிசயங்களுண்டாச்சு
பொல்லாதகாடெல்லாம் பூங்காவனமாச்சு
புட்பங்கள்தான்சொரிய பூஞ்சோலையுண்டாச்சு
சாந்துபுனுகுஞ்சவ் வாதுமணந்தான்வீச
தாமரைத்தடாகங்கள் தானுமேயுண்டாகி
இந்திரலோகம்போ லிருந்தாளப்பெண்கொடியும்
வாசம்பொருந்தியே மனமகிழ்ந்துதானிருந்தாள்
தருமங்களானதெல்லாம் தற்காத்துநின்றதுவே
வந்தகாற்றுக்கூடிக் கயிறுந்தெரிந்ததுவே
ஓடிவந்ததூதர் உரைத்தார்கணக்கருடன்
பொல்லாதகாடெல்லாம் பூங்காவனமாச்சு
ஆனைக்கட்டுங் கயிறுமறுந்ததென்றார்
இத்தனையுங்கேட்டு இயற்கணக்கர்நேரம்
செப்புத்தூணொட்டிச் சிறக்கவேதான்காய்ச்சி
செப்புத்தூணோடே சேர்த்து இருக்குமென்றார்
கொல்லரைக்கூட்டிவந்து கூறவேதான்காய்ச்சி

காய்ச்சிப்பிடுங்கவுமே கம்மாளர்வந் தணிற்க
அமராவதியு மபயமிடத்தெடுத்தாள்
கண்கள்தெரிந்துவிழக் கன்னத்திற்போடுமென்றா
தண்ணீர்தவிக்குதென்றாள் தாமக்குழலாளும்
ஈயத்தைக்காச்சி யிதம்பெறவேதான்கொடுத்தார்
பன்னீர்ச்சலமாகப் பாங்குடனேதான்குடித்தாள்
அதையும்அறிந்தார்காண் ஆனதொருநாற்கணக்கர்
இருப்புலக்கையாலே யடியென்றாருத்தமனா
அங்கோரஞ்செட்டிச்சி யானைபோல்வீறிடவே
வீறிட்டசத்தம் விமலனார்தாமறிந்து
சிருட்டித்தாரங்கோரஞ் செட்டிச்சிநோகாமல்
மின்னுமழையு மிகவேதானுண்டாகி
காற்றும்புயலுங் கனமாகிவந்திடவே
செப்புத்தூணெல்லாஞ் சோத்தளிர்த்ததுவே
கொல்லர்குறடுங் குளிர்ச்சிகளானதுவே
தாமக்குழலாளுந் தற்சொரூபமாயிருந்தாள்
இன்னமொருவுபாய மெடுத்தாரேயுத்தமனார்
அரையளவுகுழிகள் ஆழமாய்வெட்டியதில்
செட்டிச்சியம்மைதனைச் சீராகத்தானிருத்தி
கைகள்தனைப்பின்னங் கட்டாகத்தானிறுக்கி
உச்சிமயிரை யொருமிக்கத்தான்வகிர்ந்து
மூன்றுதிசைமரத்தில் மூன்றுவகையாய்முடிந்து
ஆனைதனைக்கொண்டிடற அடித்துவிடுமென்றுரைத்தார்
இந்தமொழிகேட்டுடனே யேங்கினாள்பைங்கொடியும்
அப்போதுதூதுவர்கள் அதுசெய்யவந்தவுடன்
தருமங்கள்செய்ததெல்லாந் தழைத்துமிகவோடிவந்து
காற்றுபுயலுங் கடுகெனவேதானடித்து
எல்லாரையும்தூக்கி யெறிந்ததேபூமியிலே
அதையுமறிந்தார்காண் ஆனதொருநாற்கணக்கர்
அட்டைக்குளத்தி லழுந்தவேதள்ளுமென்றார்
தாமரைத்தடாகமாய்த் தானுமேயுண்டாச்சு
அட்டைக்குளத்தி லழுந்தாதபாவிக்கு
செட்டிச்சியாலே சிவலோகஞ்சேர்ந்தார்கள்
வாசம்பொருந்தி மணந்ததேயக்குளமும்
செக்கிலேபோட்டுத் திருகுமென்றாரிழையை
வாணியரைக்கூட்டிவந்து வடங்களுந்தான்முறுக்க
அந்தச்சமயத்தில் அங்கொருவரில்லாமல்
தாயில்லாபிள்ளைநின்று தவிக்கிறதைகண்டாளே
பிள்ளைகளையெடுத்துப் புழுதியெல்லாந்துடைத்து
கண்ணீர்துடைத்துக் கதிவனுப்பினளே
ஆதரவுசொல்லி யனுப்பினாள்பிள்ளைதனை

உடனேவடமுறுக்கி யோடிவந்தார்வாணியருரு
செட்டிச்சியம்மைதனைச் செக்கிலேதான்போட்டு
ஆட்டவேணுமென்று அங்குவந்தாரந்நேரம்
செட்டிச்சிமப்போ சிவனைநினைந்தழுதாள்
அப்போதொருகாற்று அவனிதனிலுண்டாகி
செப்புக்குத்தகர்ந்தவுடன் செக்குலக்கைதான்முறிந்து
ஆனைகள்பட்டு அழகுவடன்தான்முறித்து
ஓடியேதூதுவர்க ளொருவருமேகாணமல்
அந்நேரம்வாணியர்கள் அதிசெய்திகண்டவுடன்
வந்துமேசொல்லுகிறுர் வாய்த்தகணக்கருடன்
ஆகாசக்காற்று அதிகோபமாகவந்து
செக்குத்தகர்ந்து செக்குலக்கைதான்முறித்து
வோடினார்தூதுவர்க ளொருவருமேதான்காணும்
அமராவதியாளு மன்னம்போலவேயிருந்தாள்
கணக்கரிதைகேட்டவுடன் கண்களிரண்டுஞ்சிவந்து
அமராவதியாளை யழிநரகில்தள்ளுமென்றார்
நரகத்தைக்கண்டாளே நல்லதொருமாதும்
நரகத்திலேகிடந்த பாவியர்களெல்லோரும்
செட்டிச்சிபார்த்தபுடன் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
நரகக்குழிகளெல்லாம் நல்லகுழியாயினதே
அதையுமறிந்தாரே ஆனதொருகணக்கர்
எண்ணையும்பிண்ணுக்கும் எடுக்கவென்றாரவள்தலையில்
விற்றுவரச்சொல்லி விடைகொடுத்தாரந்நேரம்
அந்நேரந்தூதர்கள் அவள்தலையிற்றானெடுத்து
ஏழுதெருவும் யியல்புடனேகூவிடவே
கொள்ளுவாருமில்லைக் கூப்பிடுவார்தானுமில்லை
பட்டணத்துள்ள பலபேர்களெல்லோரும்
புண்ணியரைச்சற்றும் புகழ்ந்தறியாய்ப்பாவியிட
யெண்ணையும்புண்ணுக்கு மினிவாங்ககாலமென்று
செட்டிச்சியைக்கண்டவுடன் தெருக்கதவைதானடைத்தார்
தெருவுகடெல்லாஞ் சேரவேதான்சுமந்து
கழுத்துத்தெறிக்க கண்முண்டைதான்பிதுங்க
அமராவதியாளும் அநியாயமென்றழுதாள்
அய்யோதெய்வமே அரும்பாவஞ்செய்தேனே
இந்தவிதிகளெல்லாம் எனக்கேவரவேணும்
விதியைநினைத்தந்தணர் வீதியில்வந்தவுடன்
அதிலொருபிராமணியும் அந்நேரமோடிவந்து
எண்ணெயும்பிண்ணுக்கும் இறக்குமென்றாளப்போது
அந்தக்ஷணமே யிறக்கினாளப்போது
தண்ணீர்தவிக்குதென்றாள் தாமக்குழலாளும்
நீர்மோர்பெருக்கி நிறையவேகொண்டுவந்தார்

கொண்டுவந்தமோரை குடித்தாள்வயிறுமுட்ட
தாகந்தெளிந்து தகைதீர்ந்தாள்செட்டிச்சி
பிராமணியுமப்போ பெருத்தமொழியுரைத்தாள்
அமராவதியாள் அருகிருந்துகேட்கலுற்றாள்
அன்னமேமேதனே யமராவதியாளே
நீயெத்தனைதருமம் நிலையாகச்செய்தாலும்
சித்திரபுத்திரனைச் சிந்தையில்லையாமல்
புண்ணியவானென்று புத்திதனில்லையாமல்
இயமதருமர்வாசலிலே யிருந்துக்கணக்கெழுதப்
பசுவின்வயிற்றில் பாலகனாய்வந்தவரை
அவரைநினையாமல் அனியாயம்போனதென்ன
தருமங்களெல்லாம் தவிடுபொடியாக்கிடுவார்
அண்டபுவனமெல்லா மறிந்துகணக்கெழுதப்
புண்ணியனார்வந்து பிறந்ததறியாயோ
இத்தனைபாடுபட்டும் எள்ளளவும்புத்தியில்லை
அவரைநினையாமல் அவதிபடப்பட்டாயே
அவர்நோன்பிருக்க அறிவிக்கவேணுமென்றும்
உன்னாலேதானு முலகெங்குந்தானறிய
கூட்டிவந்தேயுன்றனைக் கோறணிகள்செய்கின்றார்
என்றேபிராமணியும் எடுத்துரைத்தாளந்நேரம்
அமராவதியாட்கும் அறிவுமிகவுண்டாகி
சித்திரபுத்திரரே சிவனார்பெருங்கணக்கர்
பாவங்கள்புண்ணியங்கள் பகுத்தெழுதவந்தவரோ
காணுதகாட்சியெல்லாங் காட்டிவைத்தார்சீமானும்
அவரைநினையாம லல்லலெல்லாம்பட்டேனே
அறியாமல்நானும் அவதியுற்றேனென்றுசொல்லி
மண்ணில்விழுந்து மலரடியைத்தெண்டனிட்டு
அறிவெனக்குவந்ததையா ஆனதொருபாலகரே
செய்தபிழைபொறுப்பீரென்று சொல்லியேதெண்டனிட்டார்
கணக்கருமப்போது கருணைமிகவுண்டாகி
சித்தந்திரும்பித் திருவாய்மலர்ந்தருளி
மெத்தமனமகிழ்ந்து வேகமெல்லாந்தான்தணிந்து
என்னைநினைந்ததினால் என்னோடுடன்பிறப்பும்
இவளுக்குநற்பலனும் இனிகொடுப்போமென்றுசொல்லி
ஸ்நானங்கள்பண்ணிவரத் தாமேயனுப்பினர்காண்
ஸ்நானங்கள்செய்து தவக்குறையுந்தான்முடித்து
சிவனைநினைந்து திருநீறுந்தானணிந்து
சித்திரபுத்திரரே சீமானேயென்றுசொல்லி
கணக்கரிடத்திலே காரிகையாள்வந்துநின்றாள்
அந்நேரமுங்கணக்கர் ஆனையைவரவழைத்து
திருமஞ்சனங்கொண்டுவந்து சிறக்கவேதான்சொரிந்து

பட்டுமுதலுள்ளதெல்லாம் பண்பாகத்தான்கொடுத்தார்
ஆபரணமெல்லா மழகாகத்தான்கொடுத்தார்
எல்லாப்பதமு மினிமையாய்த்தான்கொடுத்தார்
அந்நேரமேதானும் அமராவதியாளும்
தருமத்தையெல்லாம்நான் தவறாமல்செய்திடவும்
என்னையிழுத்துவந்து இடறுகள்செய்வானேன்
வகைவிபரமாக வசனிக்கவேணுமென்றாள்
அப்போதுநற்கணக்கர் அறிவித்தாருத்தமிக்கு
உன்றலேயென்பே றுலகமெல்லாந்தானறிய
செய்துவைத்தேனுத்தமியே செய்தபிழைபொறுப்பாய்
என்றேன்பிருந்தவர்கள் இகபரங்கள்தானடைவார்
இந்தவிரதம் எடுத்திராபாவியற்கு
நீபட்டதெண்டனைகள் நிலையாகத்தானடக்கும்
அப்படிக்குவாராமல் உன்னையழைத்துவந்தோம்
உன்றலேமோட்ச மடையவென்றேயுன்னைநான்
கூட்டிவந்ததென்றவுடன் கொம்பனையாள்கேட்டிடுவாள்
அறிவித்தால்நானு மப்படியேநடப்பேனென
சொல்லுகிறேன்கேளாய் சுகமானவென்பிறப்பே
சித்திரைமாசம பதினெட்டாந்தேதியிலே
சித்திரைக்குச்சித்திரையில் சீரார்பவுரணையில்
பூதலத்திலுள்ள புகழ்ந்தமனுச்செந்துவெல்லாம்
ஆண்பெண்ணுடனே யடைவாகநோன்பிருந்து
ஆறுகுளத்திலே யன்பாகத்தான்முழுகி
திருநீறணிந்து சிவனைமிகவணங்கி
சூரியநமஸ்காரந் தொழுதுமிகவணங்கி
புதுப்பணிகளெல்லாம் பூட்டியலங்கரித்து
சாந்தாற்றரைமெழுகிச் சந்தனத்தால்கோலமிட்டு
வாழைக்கரும்பு வான்கமுகுதானிறைத்து
பழக்குலைகளாலே பந்தற்கால்தானிறுத்தி
மஞ்சள்குலையும் மாங்குலையுந்தான்தூக்கி
பலகைதனைப்போட்டுப்பாவாடைமேல்விரித்து
வேழமுகத்தா விநாயகனைமுன்புவைத்து
பூரணகும்பம்வைத்துப் பொன்னின்விளக்கேற்றி
நிறைநாழிவைத்து நிறைமரக்கால்தானும்வைத்து
அடைக்காயும்வெள்ளிலையும அன்புடனேதான்படைத்து
கடலைதுவரைமுதல் காராமணிபயறும்
பயறுவகையுள்ளதெல்லாம் பாங்குடனேதான்படைத்து
பலகாரவகைகள் பாங்காகச்செய்துவைத்து
பருப்பரிசிபாணக்கம் பாங்குடனேதானும்வைத்து
பொன்னினெழுத்தாணியுடன் புத்தகமுங்கூடவைத்து
உப்புமுதற்கற்பூ ரமுள்ளதெல்லாந்தான்படைத்து

எள்ளுபருத்தி பேற்றதொருமுத்துக்களும்
இத்தனையும்நன்று யியல்பாகவைத்தபின்பு
புதுப்பானைதன்னிலே பொங்கலிட்டுகீழிறக்கி
திருக்கண்ணமுதுஞ் சேகரமாய்வைத்திறக்கி
புத்துருக்குநெய்யும் பொரிக்கறியும்பாற்குழம்பு
கறிவகைகளுள்ளதையுங் கட்டாகத்தான்படைத்து
தயிருமுறைத்துவைத்துச் சகலகறிவர்க்கமுடன்
நேமநிட்டையாக நைவேத்தியஞ்செய்து
அரகராவென்று அடிபணிந்துதெண்டனிட்டு
தூபம்புகைகாட்டித் தோத்திரங்கள்செய்துநன்றாய்
சூடன்பணிமாறிச் சூழக்குலவையிட்டு
வாத்தியங்களெல்லாம் வகைவகையாய்த்தான்முழங்க
ஆண்டவரேயென்று அடிபணிந்துதெண்டனிட்டு
ஆசாரியர்தன்னை யன்புடனேகூட்டிவந்து
கட்டாகநன்றாய்க் கதைகள்படிக்கவைத்து
இன்பமாய்த்தானிருந்து இக்கதையைத்தான்கேட்டுக்
கேட்டுமுடிந்தபின்பு கிருபைவரத்தெண்டனிட்டு
இப்படியேநோன்பு இயல்பாயிருந்தவர்க்கு
இந்தக்கதையை யெழுதிப்படித்தோர்க்கும்
எல்லாப்பதமுங் கொடுப்போம்நாமேந்திழையே
புத்திரசம்பத்தும் புண்ணியமுமுண்டாகும்
மங்கிலியம்வாழ்ந்து மக்கள்தழைத்திருப்பார்
இந்தப்படிநோன்பு எல்லோருந்தானிருக்க
பூலோகமெல்லாம் புகழ்ந்துபறைசாற்றியென்று
இந்தப்படிகணக்க ரியல்பாயுரைத்திடவே
நயினாருரைத்தபடி நன்றாய்க்கருத்திலவைத்து
தப்பாமல்நோன்பிருந்து தவம்பெறுவோமுத்தமரே
சித்திரபுத்திரரே சீமானேநீர்கேளீர்
உயிரோடேசொர்க்கம் வரவழைத்துக்கொண்டாக்கால்
இப்போதேயென்னை யிங்கேவரவழைத்தால்
என்தர்மமெல்லாந் தவிர்ந்துவிடுமென்றுசொல்ல
சித்திரபுத்திரர்க்குச் சிந்தையிகவுண்டாகி
பூலோகத்திற்போய் பொருந்தவேதான்வந்து
தருமங்களெல்லாம் தப்பாமற்செய்யவும்
போகவிடைகொடுப்போம் பொற்கொடியேகேளென்று
நூறுவயதிருப்பாய் நூறாண்டுசென்றபின்பு
உன்னையும்காணு முடனழைத்துக்கொள்ளுகிறேன்
ஆனதினால்நீயு மாக்கையழியுமுன்னே
பூந்தேரிலேறிப் போய்வாருமென்றுசொல்லி
அப்படியேதேரேறி அமராவதிஉருமுன்
அங்காடக்கு மதிசயத்தைக்கேளுமினி

## அமராவதிகதை.

கூறியகொம்பதினால் கொன்றைபசுத்தானும்
இரையமருந்தாமல் இனத்தோடுங்கூட்டாமல்
கண்ணீரொழுகிக் கதறுதேநற்பசுவும்
அமராவதியாளென் அன்னையிறந்தாளென்று
ஊராருறவுள்ளா ருற்றார்கள்தான்கூடி
கூப்பிட்டழுது கோவிந்தாவென்றிடவே
ஆண்டிபரதேசி அனியாயமென்பதுவே
அமராவதிகூட்டை யன்பாகத்தானெடுத்து
செய்யுஞ்சடங்குகளைச் சீக்கிரமாய்த்தான்முடித்து
மஞ்சளையும்பூசி மலர்களுந்தான்சூட்டி
பட்டுமுடித்திப் பாவாடைமேற்போட்டு
மாலைக்கழுத்திலிட்டு மருக்கொழுந்துதானணிந்தார்
பூந்தேருங்கட்டிப் புட்பமலங்கரித்து
வாத்தியங்களெல்லாம் வரிசையாய்த்தான்முழங்கி
குறவைதனைமுழங்கிக் கோவிந்தாவென்றுசொல்லி
அமராவதிகூட்டை யானதொருபூந்தேரில்
வைத்துமேதானெடுத்து வானமெல்லாந்தான்முழங்கி
மயானக்கரையில் வகைவகையாய்ப்பந்தலிட்டு
சந்தனக்கட்டை சதிராகத்தானடுக்கி
கருமங்கள்செய்தார்கள் காரிகைக்குமப்போது
கொள்ளிகள்வைத்து குடமுமுடைத்தார்கள்
இந்தப்படியாக யிருக்குமந்தக்கருவாயில்
வாய்க்கரிசிபோட்டார்கள் வந்தவர்களெல்லோரும்
அமராவதியாளை அனுப்பினாரந்நேரம்
மயானத்துறைத்துறைக்கு வந்தாளேதேரோடும்
கட்டையிலேயிட்ட கனத்தவுடல்புகுந்தவுடன்
செட்டிச்சியார்தனக்குச் சீவன்பிறந்ததுவே
நித்திரைதெளிந்ததுபோல் நினைவுமிகவுண்டாகி
சிவாசிவாவென்று சிவனைமிகத்தொழுதாள்
திசைநோக்கித்தானும் தெண்டனிட்டாளுத்தமியும்
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவந்தவரே
காணாதகாட்சியெல்லாம் காட்டிவைத்தீர்சீமானே
பாடாதபாடெல்லாம் படுத்திவைத்தீர்சீமானே
இப்படிநினைந்து ஏகினாளுத்தமியும்
அடுக்கினகட்டையெல்லாம் ஆல்போல்தளர்ந்திடவே
அமராவதியாள் அகத்திலேவந்தவுடன்
உற்றார்உறவுடையார் ஊராரைக்கூட்டிவந்து
போசனம்பண்ணுவித்துப் போகவிடைகொடுத்தான்
தருமங்களெல்லாந் தப்பாமல்செய்திடுவான்
நயினார்தன்நோன்பு நன்றாகவிருக்கவென்று
நாயனார்தம்பிட்டத்தில் நன்றாயறிவித்தான்

தர்மராசாவுமப்போ தானுமிகப்பயர்ந்து
ஸ்ரீபுருஷாள்தானுஞ் சிறக்கவேநோன்பிருந்தார்
சித்திரைமாதம் பதினெட்டாந்தேதியிலே
சித்திரைக்குசித்திரையிற் சீருய்ப்பவுரணையில்
பறையோசைகேட்டுப் பதம்பெற்றோமென்றுசொல்லிப்
பூலோகத்திலுள்ள புகழ்ந்தமனுடரெல்லாம்
நயினார்திருநோன்பு நன்றாகத்தானிருங்கள்
என்றுசொல்லிவள்ளுவனும் எடுத்துப்பறைசாற்றிடவே
பலகைதனைப்போட்டுப் பாவாடைமேல்விரித்து
நிறைநாழிவைத்து நிறைமறக்கால்தானும்வைத்து
தேங்காய்ப்பழமுஞ் சிறக்கவேதானும்வைத்து
சர்க்கரையெள்ளுருண்டை சகலபதார்த்தமுடன்
பருப்பரிசிபாணக்கம் பாங்குடனேதான்படைத்துக்
கறிவகைகளுள்ளதெல்லாங் கட்டாகத்தான்படைத்துப்
பொங்கலுமிட்டுப் போதல்பிசபடைத்துத்
திருக்கண்ணமுதுஞ் சேகரமாய்த்தானும்வைத்துப்
புத்துருக்குநெய்யும் போதவேதான்படைத்துத்
தூபதீபங்காட்டித் தோத்திரங்கள்தான்செய்து
தெண்டனிட்டுத்தான்பணிந்து திருநீறுந்தானணிந்து
ஏங்கிப்பரதவித்து இறுக்குஞ்சருவாயில்
உத்தமனார்தாமு முடனேயறிந்தார்கள்
இதற்கென்னசெய்வோமென்று ஏற்றபடிநினைந்தார்
பார்வதியாளிடத்திற் பண்பாகச்சொல்லவென்று
சித்திரபுத்திரருஞ் சிறப்பாகத்தான்பார்த்து
எந்தன்பிறப்புவளர்ப் பெல்லோருந்தாமறிய
என்னோன்புநல்விரதம் எல்லோருந்தாமிருக்க
வேணுமென்றுநினைந்து மேன்மையுள்ளசெட்டிச்சி
அமராவதியாளை யன்புடையமாதரசை
வரவழைத்துநானும் வகைப்படிசொல்லிவிட்டேன்
சொன்னபடியவளும் தோத்திரங்கள்செய்துமிகப்
பூலோகத்துள்ள புகழ்ந்துமனுடர்க்குரைத்தாள்
விரதமிருந்து விஸ்தாரஞ்செய்துவைத்தாள்
எந்தன்பிறப்பை எடுத்துரைக்கயாருமில்லை
சிவனாருமப்போது சிந்தைமிகவுண்டாகிப்
பார்வதியம்மாளைப் பக்கத்திற்றனழைத்து
புத்திரநற்பிறப்பைப் பேரார்மிகநீயும்
பூலோகந்தானறியப் போய்ச்சொல்லுமென்றுரைத்தார்
பாப்பாத்திவேஷம் புகுந்தாளேபார்வதியும்
கையிற்பிறம்புங் கனத்தவொருபுத்தகமுந்
தானெடுத்துக்கொண்டு சதிராகவந்திருந்து
ஏதுக்குநீயும் இளைப்புடனேயிருக்கின்றாய்

என்னுடனேநீயும் உரைத்திடுவாயுத்தமியே
அமராவதியாள் அறிவுமிகவுண்டாகி
நயினார்திருநோன்பு நாங்களிருக்கின்றோம்
அவருடையபிறப்பை யறிவிப்பாரில்லாமல்
தயங்குகிறோமென்றாள் தாமக்குழலாளும்
அப்போதுபிராமணியும் அவிழ்த்தாளேபுத்தகத்தைக்
கேளுங்களிக்கதையைக் கிருபையுடன்சொல்லுகிறேன்
நாட்டுக்கணக்கர் நமனார்பெருங்கணக்கர்
பூலோகத்துள்ள புகழ்ந்தமனுடருக்கும்
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவேணுமென்று
எமதர்மர்வாசலிலே யிருந்துகணக்கெழுதுவதும்
பிறப்பும்வளர்ப்பும் பேரானநல்வனமும்
தவத்தாலேவந்தகதை தானேயுரைத்திடுவாள
தவத்தருமைகண்டு சந்ததியாய்வந்ததுவும்
பசுவின்வயற்றில் பாலன்பிறந்ததுவுஞ்
சம்புதலத்திற் றாமரையாயிருந்ததுவும்
எல்லாக்கதையும் எடுத்துரைத்தாள்பிராமணியும்
புத்தகமுந்தானும் பொன்னினெழுத்தாணியுடன்
கேட்டார்களெல்லோருங் கிருபையுடனேயிருந்து
தெண்டனிட்டுத்தான்பணிந்து திருநீறுவாங்கிவிட்டார்
சாந்துசவ்வாது சந்தனமுந்தான்கொடுத்தார்
அடைக்காயும்வெள்ளிலையும் அன்புடனேதான்கொடுப்ப
மாலைகழுத்திலிட்டார் மண்டலமெல்லாமறிய
ஆபரணம்பூஷணமு மன்பாகத்தான்கொடுத்தார்
இப்படியேவரிசைபெற்று யேகினாள்பார்வதியும்
சிவனாரிடத்திற் சேர்ந்திருந்தாள்பார்வதியும்
புத்திரனாரிடத்திற் போதொருசேதியெல்லாஞ்
சிவனாருங்கேட்கச் சிந்தைகளிகூர்ந்து
செப்பினாள்பார்வதியும் சேதியொன்றுந்தப்பாமல்
பூலோகந்தானறி போனதெல்லாஞ்சொன்னவுடன்
புத்தி ப்படியே புகழ்ந்துமிகதொழுது
இயமரிடம்வருவதற்கு வேற்றவிடைவாங்கி
புத்திரனும்வந்து புகழ்ந்துமேதானிருந்தார்
இந்தக்கதையை யின்பமாய்க்கேட்டவுடன்
அமராவதியாட்கு அறிவுமிகவுண்டாகிச்
செல்வங்களெல்லாம் சேரவேயுண்டாகி
நாளுக்குநாளதிகம் நன்றாய்த்தழைத்ததுகாண்
கேட்டபேரெல்லோருங் கிளைகளுடன்வாழ்ந்திருந்தா
நினைத்தபடிமுடித்து நீடூழிவாழ்ந்தார்கள்
அமராவதியாட்கு ஆண்டுநிலைத்ததுவே
நோன்புகள்செய்தாட்கு நாளுண்டுசென்றவுடன்

# அமராவதி கதை.

சித்திரபுத்திரருஞ் சிந்தைதனிலேதெரிந்து
நோன்புமறவாமல் நூறுண்டுந்தானிருந்தாள்
அவளையுமிங்கே யழைக்கவேணுமென்று
கூட்டோடேசொர்க்கத்திற் கூட்டிவரவேணுமென்று
பூந்தேரனுப்பினார் புண்ணியனாரன்புடனே
அந்நேரந்தானும் அமராவதியாளும்
நூறுவயதளவு நோன்புவிடாதிருந்தால்
சிவலோகம்போகிறேன் செகத்துள்ளபுண்ணியரே
நோன்புவிரதத்தை நுணுக்கமாய்த்தானறிந்து
ஆண்டாண்டுகள்தோறு மன்பாகத்தானிருந்து
கிருபைபெறவேயிருந்து கேளுங்களிக்கதையைப்
பயபக்தியாயிருந்து பலன்பெறுங்கள்புண்ணியரே
என்றுமிகச்சொல்லி பெற்றதொருவுத்தமியும்
அந்தியகாலம் அடுக்கவேவந்திடவே
தானதருமங்கள் தயவாகத்தான்கொடுத்தாள்
பிராமணபோஜனங்கள் பிரியமாய்நடத்திவைத்தாள்
சிவபூசைகுருபூசை செய்துமேதான்முடித்துக்
கூட்டோடேசொர்க்கத்திற் கூடுகிறேனெனவுரைத்தாள்
இந்தப்படிசொல்லி யிருக்குந்தறுவாயில்
அந்நேரம்வந்ததுகாண் அழகானபூந்தேரும்
அமராவதியும் அவள்தர்மராஜாவும்
இருபேருமொன்றாய் ஏறினாள்தேர்மீதில்
சிவகணங்கள்வந்து தேர்கொண்டுபோனார்கள்
பூமாரியாகப் பொழிந்தார்களந்நேரம்
பரமசிவனும் பார்வதியுமிதுகண்டு
சொர்க்கத்துவாசலையுந் திறக்கவேசொன்னார்காண்
சித்திரபுத்திரரைச் சென்றுமேதெண்டனிட்டு
சிவனுடுமையாளைச் சேரவேதெண்டனிட்டுச்
சிவனாரிடத்திற் செப்பினாளுத்தமியாள்
தருமங்கள்செய்யவின்னந் தரணிதனிற்பிறக்க
புத்திரருமப்படியே பொருந்திப்பிறப்பதற்குப்
பிரமாவைப்பார்த்துப் பிறப்பிக்கச்சொல்லினார்காண்
அந்நேரம்பிர்மாவும் அகமகிழ்ந்துகொண்டாடி
தலைமகளாகப் பிறப்பித்தாரன்னேரம்
தருமராசாவையுந் தலைமகனாய்ப்பிறப்பித்தா

ஒருவருக்கொருவர் ஒப்புறவாய்வாழ்ந்திருந்தார்
அந்தப்பிறவியிலும் அப்படியேதானதர்மம்
புண்ணியங்களெல்லாம் புகழ்ந்துநடத்தினர்காண்
அன்னக்கொடிகட்டி யடைவாகத்தான்வாழ்ந்து
தவறாமல்நோன்பு தானிருந்தாரதுபார்த்து
ஆனபடிவாழ்ந்தே யாண்டுநூறானபின்பு
சித்திரபுத்திரரும் தேனரயனுப்பினர்காண்
கூட்டிவந்துவிட்டார்கள குற்றமில்லாஇருவரையும்
இன்னமுந்தான்பிறக்க வேணுமோயேந்திழையே
என்றுசித்திரபுத்திரர் இதமாகத்தான்கேட்க
இறப்பதுவும்பிறப்பதுவும் இனியெனக்குஆகாது
கலியுகங்கள்வந்து கலந்துதேபுண்ணியரே
அதன்மங்கள்வந்து அழிக்குமேபுண்ணியரே
நட்சேத்திரபதவி நலமாகவருளுமெனச்
சிவனரிடத்திலவர் செய்திகள்தானுரைத்து
அந்நேரம்பிர்மா அப்படியேசெய்துவைக்க
நட்சேத்திரப்பதத்தில் நன்குடனேவாழ்ந்திருந்தார்
இந்தக்கதையை யெடுத்துரைக்கக்கேட்டவர்கள்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரூன்றி
மூங்கில்போலன்னைசுற்றம் முசியாமல்வாழியவே
பூலோகமெல்லாம் பொருந்தவேவாழியவே
எல்லோருமென்று யினிதாகவாழியவே
சித்திரபுத்திரனார் சீமானும்வாழியவே
பொன்னினெழுத்தாணியுடன் புத்தகமும்வாழியவே
நெல்வேலிநாதர் நெடுங்காலம்வாழியவே
காந்திமதியம்மாளும் கணபதியும்வாழியவே
ஸ்ரீகோபாலவிலாசவச்சி யந்திரசாலைவாழியவே.

அமராவதிகதை

முற்றிற்று.